ஸ்ரீ தென்காசியாகிய

# அவிநாசிக் கருணாம்பிகை சதகம்.

இஃது

கோயமுத்தூரைச் சார்ந்த செட்டிப்பாளையம் வித்வான் ம-ா-ா-ஸ்ரீ

**வாசுதேவ முதலியாரவர்களால்**

இயற்றியது.

இப்பிரபந்தம் இயற்றுவித்த ம-ா-ா-ஸ்ரீ

**சுப்பிரமணிய முதலியாரவர்கள்**

பௌத்திரரும் மதுக்கரை மணியகாரரும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ

**ச. கருப்பண்ண முதலியாரவர்கள்**

விருப்பத்தின்படி

திரிசிரபுரம் வித்வசிரோமணியாகிய ம-ா-ா-ஸ்ரீ

**சி. தியாகராசச் செட்டியாரவர்கள்**

மாணாக்கரும் கோயமுத்தூர்க் காலேஜ் தமிழ்ப் பண்டிதருமாகிய

கும்பகோணம்

**ஆர். சபாபதிப் பிள்ளை அவர்களால்**

பல ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டு

---

**ப. இராமசாமி முதலியாரவர்களது**

**கே. ஆர். வி. அண்டு கோ அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.**

**கோயமுத்தூர்.**

**1891-ஸ்ரீ**

## இப்பிரபந்தஞ்செய்தாரது

# சரித்திரம்.

---

கொங்கவள நாட்டிற் சிறப்புற்றோங்கிய கோயமுத்தூரைச்சார்ந்த ஓராட்டுக்குப்பை, செட்டிப்பாளையத்தில், சற்றேறக்குறைய எழுபது வருஷங்களுக்கு முன் தொண்டைமண்டல வேளாளர் மரபிற்பிறந்த ம-ா-ா-ஸ்ரீ வாசுதேவ முதலியாரவர்கள் சோழதேசத்திலுள்ள ஸ்ரீ திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தில் அக்காலத்தில் மஹா சன்னிதானமாக எழுந்தருளிய ஸ்ரீ திருச்சிற்றம்பல தேசிகரிடத்தில் செந்தமிழிலக்கண இலக்கியங்கள் கற்றுணர்ந்து சமயவிசேட முதலிய தீக்ஷைகள் பெற்றுச் சிவஞான சித்தியார் முதலிய சமய சாத்திரங்களை ஓதியுணர்ந்து, புலவர் திலகமாக விளங்கியிருந்தனர். அக்காலத்தில் வஞ்சிப்பாளையமென்னுந் திருப்பதியில் வசித்த ம-ா-ா-ஸ்ரீ ஸ்ரீமான் சுப்பிரமணிய முதலியாரவர்கள் வேண்டுகோளின்படி ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார், முதலையுண்ட பிராமணச் சிறுவன் பின்னும் உயிர்பெற்று வருமாறு தேவாரத் திருமறை யோதிய திவ்ய க்ஷேத்திரமாகிய ஸ்ரீ அவிநாசிக் கருணாம்பிகையின்மீது, இச்சதகத்தைச் சிறுவர்களும் வாசித்துப்பொருளுணருமாறு எளிய நடையிற் செய்து அரங்கேற்றினார். மேற்படி சுப்பிரமணிய முதலியாரவர்கள் இப்பிரபந்தத்தின சொன்னயம் பொருணயங்களை யறிந்து பேரானந்தமுடையவர்களாய்ப் பலவகைப்பட்ட செம்பொனாபரணங்களோடுமிக்க திரவியங்களும் பரிசாகக் கொடுக்கப்பெற்று வித்வசிகாமணியானவர் ஷை முதலியாரவர்களிடம் விடை பெற்றுத் தமதிடஞ் சென்றிருந்தனர். பின்னர் ஸ்ரீ நஞ்சுண்டகூடல், திருநணாவாகிய பவானி திருமுருகன் பூண்டி இத்தலங்களுக்குப் புராணங்களும், அவிநாசிக் கருணாம்பிகை பிள்ளைத்தமிழ் ஷை கலித்துறை யந்தாதி திருப்பேரூர் பச்சைநாயகியம்மை பந்தடி வருக்கக்கோவை முதலிய பிரபந்தங்களுஞ்செய்தனர். மேற்கூறிய நஞ்சுண்ட கூடற்புராணம் மைசூரில் அக்காலத்தில் அரசுசெலுத்திய ம-ா-ா-ஸ்ரீ கர்த்தர் சாமராஜவுடையார் அவர்கள் முன்னிலையில் அரங்கேற்றி அவர்களால் குளகபாத்திரப்பொற்பணமும், முத்துக்குடை முதலிய பிருதுகளும் கொடுக்கப்பெற்று, அச்சபையிலிருந்த சம்ஸ்கிருதம் கன்னடம் தெலுங்கு இப்பாஷைகளில் தேர்ந்த வித்வான்களுக்கு ஷை பொற்பணத்தைக் கைநிறையவாரிவாரிக்கொடுத்துவிட்டு முத்துக்குடை முதலிய பிருதுகளை ஷை நஞ்சுண்டகூடலில் எழுந்தருளிய நஞ்சுண்டேஸ்வரர் திருப்பணிக்கே பயன்படுமாறு கொடுத்துப்பின், தமதுறைவிடஞ் சேர்ந்து சிலமாணாக்கர்களுக்குத் தமிழிலக்கண இலக்கியங்களைக் கற்பித்து இக்கொங்க நாட்டிற்கு நேத்திரமென்ன விளங்கியிருந்து பின் ஸ்ரீகண்ட பரமசிவனது திருவடி நீழலை யடைந்தனர்.

இச்சரித்திரம் கர்ணபரம்பரையாகக் கேட்டு வழங்கி வந்தபடி ஒருவாறெழுதப்பட்டது. இன்னும் இவர் சரித்திரமாவது இவர் செய்த பிரபந்தங்களாவது நன்றாகத்தெரிந்தவர்கள் அறிவிப்பின் இனிப் பதிப்பிக்கும் புத்தகங்களிற் பதிப்பிக்கப்படும்.

# சிறப்புப்பாயிரம்.

---

இச்செய்யுள்,
அரங்கேற்றியகாலத்தில் ஒரு புலவரா லியற்றப்பட்டது.

## அரங்கேற்றுவித்தவர் சிறப்பு.

தாவிய தரங்கப் பயோத்தி கடைந்தமுது
தந்த திரு மாலென் னவே
தவழுமலை மூவுல களாவியரு நொன்றூற்
றமிழ்க்கட றனைக் கடைந்தே
நாவினொடு செவிமணக்கு மின்பமுற வுலகரெந்
நாளுந் துதிக்க வேண்டி
நளினப்பிர சங்ககவி ராசபூரித குன்றை
நகர்வாசு தேவ தீரன்
ஆவலொடு வாரித் திரட்டியீந் திடுமமுத
மானவிச் சதக வுரையை
யபுருப நீதிநெறி முறைமையமு வாதபே
ரன்பன்மெய்த் தொண்டை நாடன்
காவியம் புயனமிக்க பாகைநகர் மேவுசங்
கரமூர்த்தி யருள்சு புத்ரன்
சங்கா குலன்சுப்ர மணியமால் சேட்டுளங்
களிமிக்குயர்ந்தன னரோ. (க)

---

# சாற்றுக்கவிகள்.

---

அச்சியற்றுவித்தவர்சிறப்பு.

---

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஆகிய உத்தமதானபுரம்
ம-ா-ா-ஸ்ரீ

## வே. சாமிநாதையரவர்களியற்றிய கவி.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

பாமேவு வள்ளைகுமிழ் செவிநாசி யவிநாசி பதியாப் பெற்ற, வோ
மேவு பொருட்சருணும் பிகைசதகத் தினையச்சிட் டுதவென் றுண்
மை, நாமேவ நிருப்பண்ணுங் கருப்பண்ண மால்விழைந்து நவில
வங்ஙன், மாமேவச் செய்வித்துச் சபாபதிப்பேர்க் கவிஞ னன்பின்
வழங்கினனால்.

கோயமுத்தூர்க் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஆகிய கும்பகோணம் ஆர். சபாபதிப் பிள்ளையவர்கள் மாணாக்கருள் ஒருவராகிய மேற்படி கோயமுத்தூர்

# வெ. ஸ்ரீநிவாசையங்கா ரவர்களியற்றிய கவிகள்.

## அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மாமருவு மணவாளன் முதனமுப்பான் முக்கோடி வானோ ரியாருந், தாமருவி யொளித்திலிருற் புக்கொளியூ ரெனவு மெலாந் தணியு ஞான்றும், *ஏமருவிப் பொலிதலினா லவிநாசி யெனவுமியற் பெரும்பேர் பூண்ட, காமருவு திருத்தலத்திற் சருதுபவர் பவநீக்கிக் களிப்பின் வைகும் (க)

அணிபூத்த செம்பவள மலைபடரும் பைங்கொடி வானரிவை மார்கள், மணிபூத்த விழிசருணம மாறாது சருமையுற வரன்மி டற்றிற், பணிபூத்த தனதுகரங் கொடுகுறியாத் தகைநத வருட் பண்பாலென றுந், திணிபூத்த பெருங்கருணை லயச்செல்வி யெனும்பெயர் கொடேவி தாளில் (உ)

நாவலவர் புகழ்செட்டிப் பாளையமே வியவாசு தேவ நாமப், பாவலன் சூட் டியசதகப் பாமாலை தனையச்சிற் பதிக்க வென்றே, பூவலர் மாப் பொதும்பா மிசைப் புயறவழக் கண்டுகளி கொண்டு சோலைச், சேவலொடு பெடைநடனஞ் செயகண்டு பாண்மிழற்றுந் திருவ நீண்ட (ங)

வலமொன்று மதுக்கரைமா நகரத்தான் வறியோர்க் கீயுங் கரத்தான், நலமொன்று கவிபல கேட்டிடுங் காதான் நீயவழி நணுகா தான்சீரப், புலமொன்று மினியவன சமுகத்தான் பொருந்துசன சமுகத்தான்பூம், பலமொன்று பொன்னுடையான பகர்தூய்மைப் பொன்னுடையான் பண்பின் மிக்கான் (ச)

பொறை வாய்மை யறிவொழுக்கங் கல்வியற மேன்மைதவம் புகழ்மற றின்ன, நிறைவாய குணங்களையோர் சாலைமா ணாக்கரென நிலவக்கொண்டே, முறையாகப் பயிற்று விபபோன் சைவசிகா மணியன்பின் முதிர்ச்சி யாலே, மறையாய்தன் பதிமுத்து விநாயகன்றுள் வனசமலர் வாவி யானேன் (ரு)

சந்திரசே கரற்பணிசண் முகவேலா யுதவேள்செய் தவமெலா மோர், சுந்தரஞ்சே ருருக்கொடுவந் துறறெனவந் தவதரித்த தூயோன் வானத், தைந்தருவே யெனப்புலவ ரகங்களிப்பப் பெரும்பொருளை யளிக்குஞ் செல்வன், முந்துமணியம் படைத்த கறுப்பண்ண வேள்கனிவின் மொழிந்தாலுக (சா)

நிலவுபனை யேட்டின்வரை பிழைநீக்கி யந்திரத்தி னிறுத்தி னானற், புலவர்புகழ் சிரகிரிநற் றியாகரா சப்பெயர்கொள் புனிதன் பானற், கலைபலவுங் கற்றுணர்ந்தோன் கடவுளடி மறவாது கருதுந் தூயோன், வலநிலவு திருக்குடந்தை வாழ்சபா பதிநாம மதிவல்லோனே (எ)

---

* ஏமம்—இன்பம் இது ஈண்டு ஏம் என இடைகுறைந்து நின்றது.

கும்பகோணம்சேட்டிவ்ஹைஸ்கூல்தமிழ்ப்பண்டிதராகிய ம-ா-ா-ஸ்ரீ

## ஓகை, ஐ. சண்முகம்பிள்ளை யவர்களியற்றிய கவிகள்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்வளர் துறக்க நகரினுஞ் சிறந்து திகழவி நாசியிற் சிவஞ்சேர், ஏர்வளர் கருணும் பிகைமலர்த் தாளி லியற்றமிழ்ச் சதகமென் றியம்புந், தார்வளர் தரநீ புனைகவென் றுவந்து சாற்றிய சுப்பிர மணியப், பேர்வளர் முகில்வாழ் வஞ்சியம் பதியிற் பெய்கபொன் மழைவளம் பெருக (க)

பரவுறு செட்டிப் பாளைய நகர்வாழ் பாவலன் வாசுதே வப்பேர், விரவுறு புகழான் சுவைசனிந் தொழுக வியற்றினன் வியப்புற மேனாள், அரவுறு மிடையா ளுமைமகிழ் வுடையா ளாயினணனியரு ளளித்தாள், புரவுறு மன்ன சுப்பிர மணியன் பேரருய்ப் புவிமிசைப் போந்து (உ)

மலரவிழ்ந் தொழுகு மதுக்கரை கடக்கு மதுக்கரை யதனின்மா மணியம், நலமுற நடத்து முயர்சுறுப் பண்ண நாமமா லன்னநன் னூலை, யுலசெலா மறிய வச்சியற றுகவென் றுரைத்தன னுகவாங்கதனிற், பலசர லிகித வழுவற வாய்ந்து பதிதனன் யாவரு மதித்தோன் (௩)

குடந்தைமா நகர்வா ழிராமசா மிப்பேர்க் குரிசில்செய் தவப்பய னுற்றோன், மடந்தபப் பரந்த தியாகரா சப்பேர் வாரியின் மூழ்கிமே லுயர்ந்தோன், குடந்தரு முனியைக் குறுக்கிய பெரியோன் குறைவிலா நண்பெனக் குரியோன், தடம்புயத் தண்ணல் சபாபதி யெனும்பேர் தரித்தநன் னுவல ரேறே (௪)

---

சேலம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ

## சா. சரவணப்பிள்ளையவர்களியற்றியகவிகள்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருநாவ லூர்த்தோழன் றிருப்பாட்டுக் கொருமுதலை தின்று மாய்ந்த, வருநாத மறைச்சிறுவன் றனைத்திரும வழைத்துதவு மமலன் யாண்டு, மருநாறு மலர்த்தடஞ்சூ ழவிநாசி வரதனிட மருவி யார்க்குஞ், சருநாமங் துடைத்தருளுங் கருணைநா யகிமீது சகியு மன்பில் (க)

சீர்மருவு செட்டிப்பா ளையத்தமர்ந்தோன் பலசலைதேர் சிறப்பின் மிக்கோன், கார்மருவுங் களனமரும் பதிமகிமை பலதமிழிற் கரைந்த தூயோன், பார்மருவு புகழ்படைத்த வாசுதே வப்புலவன் பகர்ந்து சாத்து, நேர்மருவ லருஞ்சதகப் பாமாலை பூமீது நிலவு மாறே (உ)

தொறுப்பண்ணை வளஞ்சுரந்து நாளுளும், பெருகுசெல்வந் தோயுஞ் சீலன், வெறுப்பண்ணப் புலவருக்கு மிலவருக்கு மீந்துபுகழ் வி

மைழந்து பூண்பான், மறுப்பண்ண மனஞ்சிறிதும் பொருந்தாதான் ம துக்கரையின் மன்னி வாழுங், கறுப்பண்ண மகிபனனி யுளத் தெண் ணிப் புரிந்தசெயல் கழறக் கேண்மோ (௩)

செந்தமிழ்ச்சா கரம்பருகி யகங்களித்த வரையடக்கிச் சிவன்பா லன்பு, நந்தியே படிப்பாரைச் சீர்படுத்திக் குறுமுனிநேர் நலத்தா னென்று, நந்தலிலாக் கோயமுத்தூர்க் * கல்லூரித் தமிழ்ப்புலமை ந டாத்துமேலோன், சந்தமுறுஞ் சபாபதியென் றொருபெரும்பேர் பெ றுபெரியோன் றன்னைக் கொண்டே (௪)

†புல்லிதழிற் பொறித்துநெடு நாளாகக்கிடந்தமையாற் புக்க மாசு, கல்லுவித்துப் புடவிமிசை யனைவோரு மோதியுளங் திருத்து நாளு, நல்லவனங் கறுப்பண வேணீடூழிவாழியென நயந்து வாழ்த்தச், சொ ல்லரிய யந்திரத்தா லெழுதியீந் திசைநிறுவித்துலங்கினனே (௫)

---

புரவிப்பாளையம் சமஸ்தான வித்வான் நெகமம் ம-ா-ா-ஸ்ரீ

## முத்துநாகப்ப முதலியாரவர்களியற்றிய

### நிலமண்டில ஆசிரியப்பா.

சங்கைச் சடிலத் தெங்க ணாயகன்
தாவாக் கருணை மூவா முதல்வன்
அம்பலத் தாடு மும்பர்கள் பெருமான்
தன்னைச் சுற்றுபு முன்னர் நின்ற
ஐங்கரப் பிள்ளைக் களித்தமாங் கனியுங்
காரைக் கால்வரு நேரிழை கையின்
அடுத்தங் கிருக்கக் கொடுத்தமாங் கனியுந்
தன்கனி யென்ன வின்கனி பலவுடை
மாம்பொழி லுடுத்த வோங்கெழிற் செட்டிப்
பாளையத் தமர்ந்த நீளிரும் புலமை
வாசுதே வப்பெய ரேசிலாக் கவிஞன்
கருணா லயத்தாய் சரணம் புயத்துச்
சதகமென் றொருநூ லிதமுறப் புனைந்தனன்
பன்னூற் பொருளமை யந்நூ றன்னை
மேனிலை யமரு மானினியார்தங்
கூந்தலின் மரீஇ வாழ்ந்திடு மளியினந்
தெய்வக் கங்கை சிதைந்து தூர்ந்திட
மலர்த்தா துகுக்கும் வானுலாம் பொதும்பர்
வேலியெனக் கொளீஇ மேலுறு குடந்தை
நகர்தனி லுதித்த நாவலர் திலகன்
இலக்கணக் கடற்கரை யேறிய நிபுணன்
இலக்கிய மென்னு மலைக்க ணிவர்ந்தோன்

---

*கல்லூரி—கல்விபயிலிடம். †புல்லிதழ்—பனையேடு.

*கொடைக்கிறை நாவல னிடைக்கலை யுணர்ந்தோன்
அன்பு நண்பு மென்பான் மிக்கோன்
சபாப்பிர சங்கத் தலைமைய ளுதலிற்
சபாபதி யெனும் பெயர் சார்ந்த சற்குணன்
சொல்வழூஉ முதலிய பல்வழூஉக் களைந்து
மண்ணிய மண்ணியிற் றிண்ணிதிற் றரவே
கதலிக் கனியிற் சிதறிய மதுவும்
மாங்கனி யதனி லோங்கிய மதுவும்
முட்புறக் கனியிற் குப்புறு மதுவும்
பன்மல ருகுத்த நனமது ந் திரளு
மொன்று பட்டாறு யொழுகிடு மந்நதிப்
புதுக்கரை யுறலான் மதுக்கரை யென்னு
நன்னகர் வாழும் பன்னரும் புகழான்
விற்பனர்க் குதவுங் கற்பகக் கையான்
சிவனடி யாரடி பவமறப் பணிவோன்
வள்ளுவ ருரைத்த தெள்ளிய விதியின்
இல்லற நடாததும் வல்லவ ளுமேலோன்
தீக்குண மனைத்தும் போக்குற விடுத்துச்
சற்குண மனைத்தும் பொறபுறப் புனைந்தோன்
செல்வக் களஞ்சியங் கல்விப் புணரி
தாயிலன் பெவர்க்கு மேய வுளத்தோன்
தன்னுயிர் போல மன்னுயிர் புரப்போன்
ஏழையர் முகம்பார்த் திரங்குந் தயாநிதி
மண்டலம் புகழுந் தொண்டை மண்டலத்தான்
ஐங்கரத் தேவுக் காலய மமைத்தோன
மங்கையர் விரும்பு மதனவுல் லாசன்
சிவபெரு மானைச் சிந்தையி லிருத்தி
யவமெலாம் போக்குந் தவமிக வுடையான்
சுப்பிர மணியத் தோன்றல் பௌத்திரன்
இப்புவி மெச்சுஞ் சுப்பிர தீபம்
மறுப்பண வில்லா மாண்பமை மனத்துக்
கறுப்பண வள்ளல் காசினி மகிழ
எழுதா வெழுததி லின்பொடு பதித்து
வழுவா தெவர்க்கு மகிழ்ந்தளித் தனனே.

---

*கொடைக்கிறை நாவலன்—தியாகராச நாவலன்.

சிவமயம்.

ஸ்ரீதென்காசியாகிய

# அவிநாசிக் கருணாம்பிகை சதகம்.

காப்பு.

## நேரிசைவெண்பா.

போற்றருந்தென் காசி புரிக்கருணை யம்பிகைமேற்
சாற்றருநீ திச்சதகத் தண்டமிழ்க்கு—மாற்றார்
அடவிகடக் குஞ்சரத்துக் காழிதந்தான் பெற்ற
கடவிகடக் குஞ்சரத்தான் காப்பு.

நூல்.

## பதினான்கு சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

### சிவபெருமானே மெய்க்கடவுளெனல்.

சீர்கொண்ட புவனச் சிருட்டித் தொழிற்குரிய
தேவனைத் துடியி னீர்ந்துந்
திதிபெற்ற வொருவனை யமைப்பிடை யளித்துஞ்
செகங்களை யெலா முருக்கும்
போர்கொண்ட சங்கார கத்தனைக் காலாங்கி
பொங்கு மழுவிடை யுயிர்த்தும்
புகறிரோ பவமூன்று தாடங் தெடுத்ததாட்
போதநெறி காட்டு கொன்றைத்

தார்கொண்ட சிவனையே பரமென்று நூலெலாஞ்
சாறறுவ தறிந்தும் வேறு
தலைவருண் டென்றுபல சமயவா திகண்மனந்
தடுமாறும் வகைதெ ரிகிலேன்
கார்கொண்ட தண்டலைத் தென்காசி யம்பதிக்
கவுரியே *பாகை நகர்வாழ்
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (க)

அந்தணரியல்பு.

புலருமுன் விதிப்படி யெழுந்துபுன லாடிமன
புனித †காயத்திரி செபம்
பூண்டோம ‡வவ §ஔபா சனங் களைமூன்று
பொழுது மறைவழி முடித்துப்
பலருமினி தோங்க ||வைந் தெச்ஞாதி கிருதும்
பயின்று முறை யுபனி யாசமும்
பரிவிற் புரிந்தறு ¶தொழிற்குரிய ராயமுத
**பானர்க்கும் வளமை யீந்து
தலமது செழிக்கமனு வேந்தர்செங் கோன்முறைமை
தடையற நடாத்தி யன்னை
தந்தைமக் கட்பா லைம்புரிதல் போலுலகு
தாங்கியிட வோங்கு செய்கைக்
கலையுணர்ந் தொழுகுவது பூசுரர்கண் மேன்மைசிவ
காமியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (உ)

---

* பாகை நகரென்பது இப்பிரபந்தத்தின் ஒவ்வொரு செய்யுள்களினிற்றிற் சொல்லுகின்ற சுப்பிரமணிய முதலியாரவர்கள் வசித்த ஊஞ்சிபாளையம் என்னும் தலத்திற்கு ஓர்பெயர்போலும்.

† காயத்திரியாவது அந்தணர் நாடோறு முக்காலங்களினுஞ்செய்யவேண்டுவனவாகிய வேத மந்திரம்.

‡ அவமாவது நித்திய ஹோமம்.

§ ஔபாசனமாவது மணமுற்றிய மறையோர் நாடோறும் அக்கினியிற செய்யப்படும் வைதிகச்சடங்கு.

|| ஐந்தெச்ஞாதி கிருதாவன, ஐந்து யாக முதலிய யாகங்கள் அவையாவன. பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகம் எனவிவை. இவைகளுள் பிரமயாகம் வேதமோதல், தேவயாகம் ஓமம் வளர்த்தல்; மானுடயாகம விருந்தோம்பல; பிதிர்யாகம் நீர்க்கடனாற்றல்; பூதயாகம் பலியீதல்; இவ்வாறன்றி ஸ்நானம், சந்தியாவந்தனம், பிரமயக்யம், வைஸ்வதேவம், பலிகரணம், ஆகயாகங்களிந்தென வடநூலார் கூறுப.

¶ அறுதொழில்களாவன ஓதல், ஓதுவித்தல்,வேட்டல்,வேட்பித்தல், ஈதல், ஏற்றல் எனவிவை.

** அமுதபானராவார் தேவர்கள்.

### அரசரியல்பு.

சோரமரு வலர்தங் குறும்படக் கிச்செயக்
கொண்டசது ரங்க தளமுங்
சொற்றக் குபேரசம் பத்தான ரசவர்க்க
குடிகளும் படியு ளெங்கும்
மேருவென ராசியொன் றச்சயம தாசமிக
விழைவுதரு பைங்கூழ் களும்
மேல்வருங் காலமொரு மூன்றையு மளந்துசொலும்
விர்ப்பன்ன மதிமந் திரியும்
நீரின்மதி கண்டமென் குமுதமா சிகளென்ன
நீங்காத நட்பு மனுநூல்
நெறிமுறைமை தவறாத நீதிமார்க் கமுநல்ல
நிலையுநெடி தான வானுங்
காரின்மலி கொடையும் பிரதாபமும் புகழுஞ்
சதித்த திறலோ னரசனுங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே, (௯)

### வணிகரியல்பு.

அதிதூர தீவுதீ வாந்தரம தென்றாலு
மலைகடற் கப்பலேறி
யங்குள சரக்குகளு மிங்குள சரக்குகளு
மறிவுடன் கொண்டு விற்றுத்
துதிசேரு முதலீது வருலாப மீதெனச்
சொல்சிற் றிலக்க வழியாய்ச்
சொற்பமா முந்திரிப் பணமுதற் கூட்டியே
தொகை கண்ட பொருளை யெல்லாம்
மதியூகி யாகவே வருமிட மறிந்துதவி
வளர்தரும் வட்டி வாங்கி
மங்காத வேலேல சிங்களைப் போலவும்
வளர்குபே ரன்போ லவுங்
கதியான கீர்த்தியெனி லெண்ணம லீருவார்
கனவணிகர் நிறையீ துகாண்
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணாலயச் செல்வியே. (௧0)

### வேளாளரியல்பு.

செஞ்சொல் கவிவாணர் கருணீகர் மகிழ்வாயெழுது
சீர்பெறு மெழுத்தாணியுஞ்
செட்டியர் சரக்கு நிறை கண்டிடு தராசு முயர்
சிற்பியர்கள் கையூ சியும்
வஞ்சகரை வெல்சூரர் பலவாயுதங்களு
மற்றுமுள பஞ்ச லோகம்
மரவேலை கல்வேலை செய்கின்ற தொழிலாளர்
வாச்சியளி கோடா லியம்

பஞ்சபாணங் களுக்கிலகு கூர் முனையுமிப்
பாரினலை முண்டு செய்யும்
பகர்மேழி விருதுபெறு வேளாளர் கொழுவின்முனை
பார்த்து முனையாகு மென்பார்
கஞ்சவா வியின்முதலை யுண்டபா லன்வரக்
கண்ட மாதலவாசியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லச்செல்வியே. (௫)

இதுவின்றி யிப்பொருள் விளங்காதெனல்.

விரையிலா மலரும் விருப்பிலா வனிதையரு
மெய்யன் பிலா முகமனும்
வெற்பிலா வரணுமுயர் கற்பிலாக் குலமகளும்
வெண்மதி யிலா விசும்புந்
திரையிலாக் கடலுமந் திரியிலா வரசுமதி
திடமிலா வீரத் துவமுந்
திரவிய மிலாதமனை வாழ்வு முபசாரங்கள்
செய்கிலார் நல்விருந்தும்
நிரையிலா வளமுமுயர் பரிசிலாக் கவியுநிறை
நெற்பயி ரிலாத விளைவும்
நிகழ்கொடை யிலாப்புகழு முன்னடிக் கன்பிலார்
நெஞ்சென விளங்கா துகாண்
கரையிலா ரம்பல கொழிக்குநன் னாறுடைய
கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன் சுப்ரமணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௬)

இவ்வகைப் பொருள்களி லிப்பொரு ளுயர்ந்ததெனல்.

வரைகளி னுயர்ச்சிமக மேருகிரி பலவா
மரங்களி னுயர்ச்சி யரசு
வல்விலங் கினமதி லுயர்ச்சிரண சிங்கநதி
வர்க்க மதின் மந்தாகினிப்
பரவிநிறை பறவையி லுயர்ச்சி கருடன்பழம்
பனுவலி னுயர்ச்சி வேதம்
பன்னரிய மணிகளி லுயர்ச்சிமா ணிக்கம்
பதங்களி லுயர்ச்சி மோட்சந்
திரையுலக மனிதரி லுயர்ச்சிமுத் தமிழெலாந்
தேர்ந்தறிவின் மிக்குயர்ந்தோர்
செப்பரிய காட்சியி லுயர்ச்சிநின் பதநளின
தெரிசனஞ் செய்தல் கண்டாய்
கரகமல மலரிற்பசுங் கிளிவளர்த்து
சிவகாமியே பாகை நகர்வாழ்
கங்கா குலன் சுப்ரமணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௭)

### இதற்கிஃதலங்கார மெனல்.

ஏர்கொண்ட ஞாலத் துதித்த புருடர்க்கெலா
மினிதலங் காரம் ரூபம்
இனியரூ பங்கட் கலங்கார மேலவ
ரிடத்திற் பயின்ற கல்வி
சீர்கொண்ட கல்விக் கலங்கார முள்ளச்
செருக்கு விட்டுனது கமலச்
சேவடித் துணையைமுப் போதுமலர் தூவியர்ச்
சித்திடுந் திவ்ய ஞானம்
பேர்கொண்ட ஞானத் தினுக்கலங் காரம்து
பெட்புள பெரும்பொறு மையாம்
பெரிதான பொறுமைக் கலங்கார முலகினிற்
பிறவுயிர்க் கருணை கண்டாய்
கார்கொண்ட மதில்கொள்வா ரணவாசி யம்பதிக்
கன்னியே பாகை நகர்வாழ்
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (அ)

### இதற்கிஃ தழகெனல்.

மண்டல மதற்கழகு மன்னர்மன் னர்க்கழகு
மனுநீதி யான செங்கோல்
மனுநீதி யானசெங் கோலினுக் கழகுவள
மருவுபல நீடு குடிகள்
கொண்டபல குடிகளுக் கழகுமனை தன்னிலே
குறையாத நிறைசெல் வமாங்
குறையாத செல்வந் தனக்கழகு நல்லசற்
குணமான வமுத வசனம்
அண்டிவரு சற்குண மதற்கழகு மிக்கமெய்
யன்பான மனதி ரக்கம்
அன்பான மனதிரக் கந்தனக் கழகுதா
னட்டி சொல்லாத வீகை
கண்டிடு மிதற்கெலா மழகுநின் மகிமையாற்
கார்சொரியு மழையென் பர்காண்
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (கூ)

### இவ்வகை யுதவிசெய் வோரிவ ராவரெனல்.

ஆரெனினு முபசரித் தன்னமிடு மாதரே
யன்புடன் பெற்ற தாயாம்
அஞ்சலென் றேமனத் திடவார்த்தை சொல்லுவோ
னருமையுள தந்தை யாகும்
பாரிலொரு தொழின்முறைமை கற்கவழி சொல்லுவோன்
பரிவுள்ள குருநா யகன்
பகைகாரர் கையினிற் சிக்குவிடு வித்துவிடு
பண்பனே குலதெய்வமாங்

கோரவிட ருற்றவே ளைக்குவங் துதவுவோர்
கூடப் பிறந்த துணைவர்
கொள்ளெனக் கடனுதவி யன்புடன முனமேனுயக
கொள்ளுவோர் பந்து சனராங்
காருலவு சுந்தரக் கந்தரக் கோபுரக்
காசியவி நாசி வாழ்வே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௧௦)

## இதனுலிது விளங்கு மெனல்.

சிந்தூர மதத்தினு லேவிளங் குஞ்சுடர்த்
திங்களி லிரா விளங்கும்
செழியதிரள் முகிலினுல் விண்டலம் விளங்குநடை
தீரக்க முறின் மாவிளங்கும்
பைந்தொடி குணத்தினு லேவிளங் குஞ்சபைகள்
பாவாணரால் விளங்கும்
பாருலகு மநுநீதி யால்விளங் குங்குலப்
பாரியான் மனைவிளங்கு
சந்ததமு மீகையாற் புகழ்விளங் குஞ்சொற்பிர
சங்கத்தி னுல்வி ளங்குஞ்
சற்குண விவேகமுள சம்பன சுபுத்ரனுற்
றன்குல மெலாம் விளங்குங்
கந்தமுறு கொந்தள சவுந்தர நிறைந்தசிவ
காமியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௧௧)

## இவ்வகைச் செயலு டையார் இவர்போல் வாரெனல்.

தன்மபரி பாலனஞ் செய்துபொய் யுரையாத
தயவுளோன் றன்ம புத்திரன்
சபைகளி னடுக்கண்ட ஞாயமாய்ப் பகர்கின்ற
சதுரன் மரியாதை ராமன்
ஜென்மமுள மட்டுமிலை யென்னுமை லீந்துபுகழ்
தேடுவோன் முன கன்னன்
செய்யபுகழ் தோற்கினுந் தான்சொன்ன சொல்லைநிலை
செய்பவ னரிச்சந் திரன்
புன்மனித ராயினுந் தனைநம்பி னவரைப்
புரப்பவன் ரகுநா யகன்
பொல்லாத கொடியவா பத்தினிற் காப்பவன்
புகலருச் சுனனென் பர்காண்
கன்மனத் தவர்களுக் கெட்டாம ணின்றமுக்
கண்ணியே பாகைநகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச்செல்வியே. (௧௨)

**இக்கொடுஞ் செயலுடையோர் இவ்வகைத் தீயோரெனல்.**

வடுவற்ற மரபிற் பிறந்தாலு மொருவர்பொருள்
வவ்வநினை வோன் வனசரன்
மற்றொருவ ருண்ணப் பொறுமற்றன் வயிறதை
வளர்க்கு மவனே சுவானம்
மடுவுற்ற கல்லெனப் பொருளைப் புதைத்தே
வழங்கா தவன் பசாசு
வாய்மைநிலை நில்லாது பிறர்மாது கவனமே
வைக்குமவ னராட்சதன்
கொடுமைகொலை பழிபாவ மொன்றுக்கு மஞ்சாத
குணமிலா மூர்க்க னசுரன்
குருவார்த்தை மாதாபி தாவார்த்தை கேளாத
கொடியனே நெடிய மிருகம்
கடுவைத்த கண்டனைக் *கண்டனென வேபெறுங்
கவுரியே பானை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை யைச் செல்வியே. (௧௩)

**பயன்படாத பொருள்களிவை யெனல்.**

பருகதலி போலவே யிலவது பழுத்தென்ன
பட்சிகட் கிரையா குமோ
பன்னிலவ ணம்புதிய சோறெனை விருந்தென்ன
பசிதனக் குண வாகுமோ
தருநதியி னீரென விளக்கெணை யிருந்தென்ன
தாகத் தினுக் காகுமோ
தாமரையி னிலையினீர் முத்தென விருந்தென்ன
தாழ்வடங் கோக்க லாமோ
மருவலர்கள் போலிருந் தாலென்ன பூளையை
மணம்பெற முடிக்க லாமோ
மன்மதன் போலச் சகோதர ரிருந்தென்ன
மங்கையர்க கின்ப மாமோ
கருமனக் கயவர்கள் குபேரனென வாழ்ந்தென்ன
கற்றவர்க் குதவி யாமோ
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை யைச் செல்வியே. (௧௪)

**மானிடர்களுக்கிது வரினிப்பொருள் வருமெனல்.**

செயமுற்ற மனிதருக கியோகதிசை வந்திடிற்
திருவுடன் திறமை யுண்டாந்
திருவுடன் திறமை யுண்டாகிலோ நல்லசுக
சீவனப் பெருமை யுண்டாம்
நயமுற்ற சீவனமு முண்டாகின் மனையின்மிக
நாடு செம்பொன்னு முண்டாம்
நாடு செம்பொன்னு முண்டாகிலோ சீர்வரிசை
நாடோறு மிகுதி யுண்டாஞ்

* கண்டன் = நாயகன்,

சுயமுற்ற சீர்வரிசை வந்திடிற் சுற்றமொடு
தொழுகுலத் தெய்வ முண்டாந்
துங்கவாழ் விப்படி நல்லோர்களுக் குறறிடிற்
சூழ்கடற் புவி மெய்க்கவே
கயமுற்ற நீரெனவு மனைவர்க்கு முதவலாற்
கனமான கீர்த்தி யுண்டாங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச செல்வியே. (சரு)

## இக்குண முடையோரா லிவர்க்கிலாப மெனல்.

விசுவாச மனுநீதி யுள்ளமந் திரியினன்
மிக்க வேந்தர்க் கிலாபம்
விதரணி கருறைகின்ற வூரினிற் சென்றிடும்
வேதியர் தமக்கிலாபம்
இசைவாக வேவெகு பழக்கநட் பாளர்வரி
லியல்வர்த்த கர்க்கி லாபம்
எந்நேர முந்தன் சரீரப்பிர யாசமுறி
லேரா ளருக்கி லாபம்
பசையான விடர்வந்து சிக்கினு லதுவே
பரத்தையர் தமக்கி லாபம்
பரிவாக வேகேள்வி யில்லாத வூரினிற்
பறிகள் ளருக்கி லாபம்
கசிவான மழையினுற் சகலவுயிர் கட்குமே
கனலாப மென்பர் கண்டாய்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (சசா)

## இவ்வகையி னோர்க்கிது தோன்று மெனல்.

தோராத செல்வர்க் குளத்திற் செருக்கதே
தோன்றுமுயர் கல்வி நுண்ணூல்
சோதித்த பேர்க்கறிவு தோன்று மெஞ்ஞானஞ்
சுரந்திடிற் பொறுமை தோன்றும்
போராத புன்கவிஞ ருக்ககந் தோன்றுநற்
புதல்வர்க்கு மரபை யெல்லாம்
போதரட் சிக்கவே புந்திதோன் றும்பொய்சொல்
புல்லர்க்கு வசைக டோன்றுந்
தீராத கோபிக ளிடுக்கணே தோன்றுஞ்
சினத்தைச் சகிக்க வல்ல
சித்தசுத் தர்க்குலக முள்ளளவு நீங்காத
செயமுற்ற பெருமை தோன்றுங்
காராளர் குலதிலக னைசக் கரமூர்த்தி
கண்ணின் மணியா யுதித்த
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (கஎ)

### இதனாலிது தோன்றா தெனல்.

துங்கநிதி யாற்றெய்வ மகிமைதோன் றாதுபெரி
துற்றகெடு மதிக னுக்குத்
தோன்றாது மடையர்க் கருந்தமிழ்ச் சொல்லருமை
தோன்றாது கற்றுணர்ந்த
சங்கமுத் தமிழ்வல்ல வர்க்கெளிமை தோன்றாது
சலியாத விதரணர்க்குத்
தன்பொருட் செலவிட வருத்த[illegible] தோன்றாது
தடியடி முரண்ட ருக்குப
பங்கமாய்ப் பின்வருங் காரியந் தோன்றாது
பலசா லிரப்ப வர்க்குப்
பண்புடன் வீட்டிருப் பதுதோன் றிடாதுவெகு
பரிவான தயவு ளோர்க்குக்
கங்கைநதி யெனவுயிர்ப் பேதங்கள் சிறிதுமே
கனவிலுந் தோன்றாது காண்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (கஎ)

### இவர்க்கிது பாரமெனல்.

சற்கதியின் மேலாசை பூண்டுளோ னுக்குச்
சரீரமே பெரிய பாரஞ்
சயினலோ பியர்தங்கள் கைப்பொருள்கள் கடுகளவு
தான்விடு லதிக பாரஞ்
சிக்குறு தரித்திரர்க ளன்றன்று சீவனஞ்
செய்வதே மிக்க பாரந்
தெளிவான புந்திநல மில்லார் கடன்வசஞ்
செய்துள நிறுத்தல் பாரம்
நற்குண மிலாதுலகின் மிகுமவா வுள்ளோர்க்கு
ஞானநெடி தான பாரம்
நாடியெந் நேரமுங் கோட்சொல்லு வோர்தங்க
ளுவடங் குவது பாரங்
கற்கவெகு சோம்பலுள மாந்தருக் கருநூல்கள்
கற்பதே கனபா ரமாங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (கஅ)

### இவர்க்கிது துரும்பெனல்.

ஆய்ந்தமெஞ் ஞானவா னுக்குமட மங்கையர்க
ளாசையெல் லாந்திர ணமாம்
அளவறு வியாபக மனத்தைச் செயித்தவர்க்
ககிலலோ கந்திர ணமாந்
தோய்ந்தசுப குணமுள வுதாரவா னுக்கரிய
சொன்ன மெல்லாந் திரணமாந்
துறவிக்கு மகிதல மெலாமொரு குடைக்குளா
ளுங்கவேந் தன் றிரணமாம்

வாய்ந்த மதியூகசா தூரியவா னுக்கெதிர்
வழக்குக ளொலாந் திரணமாம்
மானமுடை யோர்கட்கு வையகந் தன்னிலே
வளர்பிரா ணன்றிர ணமாங்
காய்ந்தமர்செய் சுத்தசவு ரியவீர னுக்குரண
களமெலா மொரு திரணமாங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (உ0)

## இவை நலமெனல்.

மேலான வுத்தமர்கள் சொல்கின்ற புத்திதனை
மெய்யென்று கேட்பது நலம்
வினையமிகு பொல்லாத புன்மனிதர் சொல்லினை
விரும்பா திருப்பது நலம்
பாலான சற்குணநல் விதரணர்க டங்கண்மேற்
பைந்தமி முரைப்பது நலம்
பண்ணுதமி ழருமையறி யாப்பரம லுத்தரைப்
பாடா திருப்பது நலம்
மாலான வுபசார வாசார மிக்குளோர்
மனையிலுண் டிடுவது நலம்
மரியாதை தெரியாத மூடர்மனை தன்னிலே
வந்துண் ததுவே நலங்
‡காலாடு சோலையுஞ் சேலாடு தடமுங்
கதிக்கு மவிநாசி மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச்செல்வியே. (உக)

## இதனையுடைய பொருணற் பொருளெனல்.

மண்டலந் தனினீதி நெறிமுறைமை தவறாத
மனிதரே நல்ல மனிதர்
மாதேவர் திருமுடியி லழகாக வணிகின்ற
மலரதே நல்ல மலராம்
உண்டிபசி யாரெனத் தரும்விதர ணிசருறையு
மூரதே நல்ல வூராம்
உத்தம குணத்தினொடு கற்புமுள தையலா
ளுலவுமனை நல்ல மனையாம்
அண்டிவரு மிரவலர்க் கில்லையென் னுமலே
யருள்வித்தை நல்ல வித்தை
யமுதகவி வாணர்பிர சங்கமுறை செய்கின்ற
வரியசபை நல்ல சபையாங்
கண்டுகளி கொளவூர்ச் சமீபத்தி லுண்டாந்
சுயத்து நீர் நல்ல நீராங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (உஉ)

---

‡காலாடு சோலை—காற்றுலவு சோலை.

### இவர்க்கிது வேண்டுமெனல்.

மனுநீதி மன்னரென னாலுமோ சமுகத்தின
மதிமந்திரி யொருவன் வேண்டும்
மணவரை யலங்கார கல்யாண மெனினுமொரு
மறையவ னிருக்க வேண்டும்
சினமான விமனிசர் சூரனா னாலுமொரு
செய்யவாள் கையில் வேண்டுந்
தெள்ளுதற் புடையபெண் ணென்றாலு மனையிலொரு
சேற்றுதுணை மனிதர் வேண்டும்
இனமான கனப்பிர சண்டகவி யென்னினு
மெதிர்கையே டொருவன் வேண்டும்
இன்பமிகு மதுரகவி மெத்தனை யுரைத்தாலு
மினியகற் பனைகள் வேண்டுங்
கனமாக விந்தவகை சேர்ந்திருந் தான்மிக்க
காரிய விசேட மென்பார்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (உரு)

### இஃதாலிஃ துண்டெனல்.

தருமநல முண்டென்று கருதினா லதுகொண்டு
சதுரான நிலையு முண்டு
சதுரான நிலைகொண்டு மலர்மகள் கடாட்சமுஞ்
சகலமேன் மைகளு முண்டு
மருவுநன் மேன்மையது கொண்டுதான் வலியவே
வரிசை செய்வாரு முண்டு
வரிசையது கொண்டுதன் மனைதன்னி லனுதினமு
மாறாத செல்வ முண்டால்
அருமையுள செல்வமது கொண்டுதன் மனதிலே
யரியநல் லிரக்க முண்டால்
அரியநல் லிரக்கமது கொண்டுவந் தோர்க்கெலா
மங்கையா லீவு முண்டு
கருதுமீ வதுகொண்டு கீர்த்திப்ர தாபமுங்
கனகதியு முண்டு கண்டாய்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (உசு)

### இஃதுடையார்க்கிஃ தில்லையெனல்.

அவனிதனி லருளிலார்க் கவ்வுலக மில்லைநிதி
யற்றோர்க்கிவ் வுலக மில்லை
யன்பிலார்க் குத்தெய்வ மில்லைமது பானியர்க்
காசார நியம மில்லை
மவுனமுடை யோர்க்கொரு வழக்கில்லை கபடமுறு
வார்க்குநட் பாள ரில்லை
வாய்மையில் லார்க்குறுதி யில்லையயன் மனைநச்சு
மடையருக் கறம தில்லை

தவநிலை யிலார்க்கு வழியில்லை யொருசார்பிலார்
 தங்கட்கு நிலையு மில்லை
சம்மதித் தாசித் திணங்காத வனிதையைத்
 தழுவுவோர்க் கின்ப மில்லை
கவின்று மடந்தையர்க ளெழில்கண்டு நெஞ்சங்
 களித்திடா தொருவ ரில்லை
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணா லயச் செல்வியே. (உரு)

## இதை விரும்பினுலிது வருமெனல்.

பலமாதர் மோகத்தை யனுசரித் தாலநிற
 பற்றறு நோய்க ளுண்டாம்
பழிகாரர் தங்களுற வனுசரித் தாலதிற்
 பயனிலாச் சண்டை யுண்டாம்
புலையாடு கள்ளர்களை யனுசரித் தாலதிற்
 பொல்லாத பழிக ளுண்டாம்
பூதயை யில்லாரை யனுசரித் தாலதிற்
 புண்ணுன வறுமை யுண்டாஞ்
சொலவரிய கோபத்தை யனுசரித் தாலதிற்
 றொலையாத பாவ முண்டாந்
துட்டர்மிகு மூர்தன்னை யனுசரித் தாலதிற்
 சுகமிலாக் கவலை யுண்டாங்
கலைமாது மரவிந்த மலர்மாது மன்பொடு
 கசிந்து புகழ் கவுமாரியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணா லயச் செல்வியே. (உசு)

## இவர்க்கிஃதில்லையெனல்.

தீராத் தரித்திரர் தமக்குநா ணமதில்லை
 திருடர்க்கு லச்சை யில்லை
தேடிப் புதைக்கின்ற பேர்க்குநற் புகழில்லை
 தீரருக் கச்ச மில்லை
யாராலு மன்னருக் கடிமையிலை மூண்டெழு
 பருந்தழற் கீரமில்லை
பதிவிரத மாதருக் கக்கினிப் பயமில்லை
 பல்லிலார்க் குரிசை யில்லை
பேராசை கொண்டுழலு மூர்க்கருக் குறவில்லை
 பித்தர்க்கு நித்திரை யில்லை
பெலமான சவிசையுள பேர்கட்கு ஞாயமிலை
 பெண்ணின்றி மோகி யார்க்குக்
காராரு மிருளில்லை நின்பாத தெரிசனங்
 கண்டவர்க் குறுபவ மிலை
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணா லயச்செல்வியே. (உஎ)

### இதனினு மிதுநன் றெனல்.

பற்பலர்க ளாசைகொளு மனைவியைச் சேர்தலிற்
 பரவேசை சேர்க்கை நன்று
பட்சமில் லார்மனையி லுண்பதைப் பார்க்கிலும்
 பலியெடுத் துண்ண னன்று
விற்பன மிலார்களைச் சேவித்து நுகர்வதினு
 மெய்க்கூலி வேலை நன்று
வெள்ளாடு மேய்ப்பதைப் பார்க்கிலூர் சுத்திவரு
 விடுகழுதை மேய்த்த னன்று
சற்பனைகள் செய்கின்ற வுறவதைப் பார்க்கிலுந்
 தனியா யிருத்த னன்று
சமுசார விர்த்தியில் லாமலலை கின்றதிற்
 சந்நாசி யாத னன்று
கற்பனை யிலாக்கவிகள் சொல்வதைப் பார்க்கிலுங்
 காளையேர்ப் பாட்டு நன்று
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணா லயச் செல்வியே. (உ௰)

### இதனிலிது விசேட மெனல்.

பொல்லாத கொடியவ னெனப்பெய ரெடுப்பதிற்
 பொன்றியொழி வதுவி சேடம்
பூதய வற்றமனை யாட்டியுடன் வாழ்வதிற்
 புலியடவி யேவி சேடம்
செல்லா விடத்தினிற் சென்றுசிறு மைப்படுஞ்
 சிறுமையிற் சிறைவி சேடஞ்
சிறிதுமுப கார மில்லார்சென்ம மதின்மிருக
 சென்மமே வெகுவி சேடம்
இல்லாமை யானொந்து மெலிதலிற் பரதேச
 மெய்தியேற் றுணல்வி சேடம்
இன்றமிழி னுண்மையறி யார்தமைப் பாடுதலி
 னெய்துவெம் பசிவி சேடங்
கல்லாத பெயர்பெறுஞ் செல்வத்தின் மாசறக்
 கற்றவர்கண் மிடிவி சேடங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணா லயச் செல்வியே. (உக)

### இஃதில்லாத வரிவரவ ரெனல்.

பிறரைவறு மைப்படினு மில்லையென் றிரவாத
 பெயர்களே செல்வ முற்றோர்
பெரிதான செல்வமுற் றிரவலர்க் கில்லையென்ற
 பெயர்களே வறுமை யாளர்
மறுவறக் கற்றிருந் தாலுமோ தெளிவான
 மதியிலார் கல்லாதவர்
வளமுற்ற கல்வியில் லாரெனினு முணர்வுதெளி
 வாகினோர் கற்றுணர்ந்தோர்

தறையினிடை யார்க்குமினி தானவன் புளூத
தயவினோர் குலவி சேடர்
சாதியி லுயர்ந்தோர்க ளானாலு முள்ளன்பு
தானிலார் தறுகண் மறவர்
கறைமிடற் றவிநாசி லிங்கர்பங் ககலாத
கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௯0)

## இவர்க்கு விழியிவ்விடத் தேனல்.

மேலான ஞானிக டமக்குவிழி மனதிலே
வேந்தர்க்கு விழி சாதிலே
மிக்கமதி மந்திரிகள் விழிகள்யோ சனையிலே
வித்துவ சனர்க்கு விழியோ
கோலா கலத்தமிழை யோதமுத வாக்கிலே
குருடர்க்கு விழி காலிலே
சோரரா விருளிலே கன்னமிடு கள்ளர்விழி
கொடிதான விருகையிலே
மாலான புதியசெல் வபெருக்குறிலதிக
மமதையுள புல்லருக்கு
மதியேது தலையேது மெய்யேது கையேது
வாயேது விழியேது காண்
காலாடு சோலைமேற் காராட மயிலாடு
காசியவி நாசி மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௯௧)

## எவ்வகைச் சிறப்புளதாயினு மிழிந்தவை யுயர்ந்தவை யாகாதேனல்.

பன்னுகடை வாயினிற் கொம்பிருந் தாலென்ன
பன்றிமத யானை யாமோ
பம்பலும் புள்ளியும் பாச்சலு மிருந்தென்ன
பகர்பூனை புலியா குமோ
வுன்னரிய வெண்மைகொ டிருந்தென்ன கடலுப்
புயர்ந்தகற் பூர மாமோ
வொருகுலம தாகிமுனை கூர்ந்திருந் தாலென்ன
வூசிநெடு வேலா குமோ
மின்னருஞ் சுடரதிக மாயிருந் தெனசருகு
பித்தாளை தங்க மாமோ
பெருமயிர்கள் கற்றைபோ லேயிருந் தாலென்ன
பெருகரடி கவரி யாமோ
கன்னக மெனப் பொருள்க ளொத்தனை யிருக்கினுங்
கவிநிதிக் கிணையா குமோ
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௯௨)

### இதனிலிது பெரிதெனல்.

செப்பரிய வுலகத்தி லேபெரிது மலையினந்
திரண்மலைக ளிற்பெரிய தாகு
செம்பொன்வட மேருவத னிற்பெரிது வாரிசூழ்
செகவண்ட கோளகை வகை
யொப்புடனிவ் வுலகண்ட முண்டதிரு மால்வாயு
முதாரமு மதிறபெரிய தாம்
ஓங்குமம் மாயவனு மளவிடா துயர்பரமு
னுருவமதின் மேற்பெரிய தாம்
அப்படி நிறைந்த சிவனைக்குடி யிருத்துமெய்
யடியார்சன் மறுவி லாத
வானந்த சுகதிவ்விய துய்யவிதை யக்கோவி
லதனிலும் பெரிது பெரிது
கற்பகக் காவலன் வணங்குபரி புரபாத
கமலியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௩௩)

### இதனிலிஃததிக மெனல்.

தெரிசனையி லதிகமா ருத்திரா தெரிசனந்
திகழ்கின்ற சுடரி லதிசஞ்
செய்யமார்த் தாண்டசுடர் போகத்திலதிகஞ்
சிறந்ததே வேந்திர போகம்
மருவுபல சமயத்தி லதிகமெது வென்னிலோ
மாசிலாச் சைவ சமயம்
மாருத தீபத்தி லதிகமாந தெய்வீக
வாசகற் பூர தீபந்
தருகொடையி லதிகமது பொருடிரண மாயினுந்
தயவான கன்னன் கொடை
சம்பத்தி லேயதிக மளகைக் குபேரனது
சதுரான சம்பத்த தாங்
கருணைதனி லேயதிக முனதுநய னப்பெருங்
கருணையே கருணை யென்பார்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௩௪)

### இவர்க்கிஃதுதவி யெனல்.

குருடனுக் குதவிதன் கையிற் பிடித்தகோல்
குலமகட் குதவி கற்பாங்
கொண்டல்சொரி மழையினு னிறைகுள மதற்குதவி
கோடுபெற விட்ட *கடைகால்
மருவுசெய்ப் பயிரினுக் குதவிபல வாவிநேர்
வாய்மொழிக் குதவி நளினம்
வளமுறச் செய்ததன் மத்தினுக் குதவியுண்
மகிழ்ந்து புகழா திருத்தல்

---

*கடைகால்—பின்னணை.

உரியவுட னுக்குதவி வேளைதப் பாதலூ
 னுயிரினுக் கினிய வுதவி
யுந்தனிரு பாதார விந்ததி லர்ச்சனைசெய்
 யுதவியே யுதவி யென்பார்
கருடர்கந் தருவர்கிம் புருடர்வித் தியாதரர்கள்
 கண்டுதுதி செய்யு மணியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணாலயச் செல்வியே. (கரு)

**எவ்வகை வல்லமை யுடையவை களுந்துந் துன்பம் வருமெனல்.**

குன்றென வுயர்ந்தபெல மதயானை யுங்குழிக்
 †கொப்பத்தில் வந்து வீழுங்
கொடியமா வீரதத் துவமுள்ள வேங்கையுங்
 கூட்டினுக் குள்ளாய் விடுந்
தன்றுணையி னொடுசகன சஞ்சார பட்சியுந்
 தகுசன்னி வாய்ப்பட் டிடுந
தாழ்ந்தமடு வுலவுநெடு மீனுமொரு தூண்டின்முட்
 டன்னிலே வந்து சிக்கும்
வென்றிமிகு திணியான மனதுடைய புருடரும்
 வேசிகைக் குள்ளாகு வார்
மேதினியி லீயாத லுத்தனும் வலுவந்த
 விசையினிற் சிக்கிவிடுவான்
கன்றுகுணி லாகவெறி செங்கண்மா றங்கையாங்
 கவுரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணா லயச் செல்வியே. (கசு)

**தீயவரிடத்து நன்மையாக நடந்தாலுந் தீமையே வருமெனல்.**

பயபத்தி யுடனடந் தாலுமோ தடியடிப்
 பாதகர்கள் பெண்டாவதும்
பணிசெயினு மெந்நே ரமுஞ்சிடு சிடுக்கும்
 பசாசரைச் சேவிப்பதும
தயவற்ற புல்லருக் கினிதுசொலி வாங்கியே
 தன் சீவனஞ் செய்வதுந்
தண்மைநடு ஞாயமில் லாவூரி லொரு தொழிற்
 சதுர்சண்டு குடியி ருப்புஞ்
சுயபுத்தி யில்லாது நயபுத்தி கொளாத
 தோகையர்கள் பதியா வதுஞ்
சொல்லரிய வெப்பிலைப் பொடியினிற் சர்க்கரைத்
 தூளிட் டருந்து சுகமாங்
கயமொன்று பசியசை வலமொத்த பூங்குழற்
 கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணா லயச் செல்வியே. (கஎ)

---

†கொப்பம்—யானைபடுகுழி.

### மூடரிவரெனல்.

தையலரை யதிசபரி காசங்கள் செய்ததிற்
றாழ்வுபெறு மூடர் சிலராந்
சகலர்க்கு மாகா தெனச்சொலிப் பின்பதைத்
தான்செய்யு மூடர் சிலராம
வெய்யதன் மனையவட் சஞ்சிகல் விருந்ததனை
விட்டுண்ணு மூடர் சிலராம
வேடிக்கை யாகவே கூடிவிளை யாடிவினை
விளைவிக்கு மூடர் சிலராந
தூய்யசற புடைமாதை யெண்ணாம லொருபழுது
சொல்கின்ற மூடர் சிலராந்
சொல்லரிய தாய்தந்தை குருவெனினு மெண்ணாது
சோர [illegible] ராய் சொல்லியே
கைகண்ட முழுமூட ருங்கிந்த நிர்மூடர்
சான்மூட ரானமூடர் சான்
கங்கா குலனருபர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௯௮)

### பதராவரி வரெனல்.

எந்நேர முந்தனை யேபுகழ்ந் தேதிரியு
மேறுபோல் வாறொரு பதர்
இயல்பான தன்*கிரக சித்திரமதை வெளிதனி
லெடுத்துரைப பாறொரு பதர்
பணருநு மேபழகி நுலுமே விசுவாச
பாதகம விடாறொரு பதர்
பாருலகி லெல்லாரு முனைவென்ப திலையெனப்
†பகிடிசொல் வாறொரு பதர்
சொன்னாலு மறியாது சுயபுத்தி யில்லாது
சோறுதின பாறொரு பதர்
துணைபத்தி லெலலாம வினபதத்து ஞறவாடு
சூழ்சேட னவறொரு பதர்
கன்னேரு மிபபதர்கள் சோறிட்ட வீட்டினிற
களவுசெய் பதர்க்கு நிகரோ
கங்கா குலனருபர மணியன்மன மகலாத
கருணா லயச செல்வியே. (௯௯)

### இவற்றி னருமை யிப்பொழுது தோன்று மெனல்.

வளமைமிகு விதரணக் கருணையது வுத்தர்பான்
மருவுற்ற போது தோன்றும்
வாலவய தருமைவிர்த் தாப்பிய மூதிர்ச்சிதான்
வந்துற்ற போது தோன்றும்
விழையுநிழ லருமைசுடு வெய்யிலி னடந்துதான்
வெயர்வுற்ற போது தோன்றும்
விரைநறுந் தண்ணீரி னருமையது தாகமிக
மேவுற்ற போது தோன்றும்

---

*கிரகசித்திரம்—வீட்டி லுண்டாய நிமை. †பகிடி—பரிகாசம்.

மறையருமை புல்லுமரி தானகொடி தாம்பஞ்சம்
வந்துற்ற போது தோன்றும்
மனையாட்டி யருமைபர வேசியரை யாசையான்
மருவுற்ற போது தோன்றும்
கழலபுனையு நின்பாத மலரருமை *வினையிற்
கலங்கிடத் தோன்று மம்மா
கங்கா குலனசுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௪௰)

## தீயவை யிவை யெனல்.

உள்ளூரி லேபட்ட பலகடனு மயலூரி
லுழுதுமிக பயிர்செய் வதும
ஒவ்வாத சிநேகமுங் கூட்டான வாணிபமு
மொருவர விலாத செலவுந
தள்ளாத சுயகொடிய ருறவுமெந நேரமுந்
†சள்ளிட்ட மனைவாழ்க் கையுந
தளாவுற்ற மூப்பிலே வறுமைநோய் வருவதுந்
தாசிகைக குள்ளா வதும
விள்ளாத ராட்சதக கணமான பெண்களை
விரும்பியிரு குடிகொள் வதும்
வேலிட்ட புண்ணிலொரு சோலிட்ட வேதனையின்
விதமொத் திருக்கு மென்பார்
கள்ளாரு மலாவாவி நள்ளாறு கங்கைசூழ்
காசியவி நாசி வாழ்வே
கங்கா குலன்சுப்ர மணியனமன மகலாத
கருணை லயச் செல்வியே. (௪௧)

## இவர்க்கிதின் மனமெனல்.

மாதவர் தமக்குமன மெய்ச்சிவ பதத்திலே
மன்னவர் தமக்கு மனமே[illegible]
மருவலர்கண் மீதிலே விதரணிகருக்குமனம்
வளருநற் கீர்த்தி தனிலே
வேதியர் தமக்குமன மறையாக மத்திலே
வித்துவ சனர்க்கு மனமே[illegible]
மேலோர்கள் சொல்பழைய மதுரதமிழ் நூலிலே
வேசிமனம் ‡விடாபொருளிலே

---

*வினையிற்கலங்கலாவது—நல்வினை தீவினையிலான்மாக்கள் வருந்தல், சாதல் பிறந்தலில் வருந்தலெனினுமாம்.

†சள்ளிடல்—சண்டை போடல்.

‡விடர்—காமிகள்

சோதின்மனை வாழ்க்கையோர் மனதுநல் விருநதிலே
சொடையிலா மடைய ருகமோ
கூட்டுமீத் தேனெனத தேடிட புதைத்திடுங்
குழியிலே சொடிய மனமாங்
சாதினெதி ரேயோடி வாதுசெயு மீனுன
கண்ணியே பாகை நகர்வாழ்
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௬௨)

## இந்தணமுடை யோரிவ் வகைமே லோராவ ரெனல்.

பொல்லாத சோபியெனு மப்பன்மொழி கடவாத
புததிரனே பரசு ராமன
*பூததயை யில்லாத வனையேனுஞ் சொறபடிப்
புரியுமவ னோரா கவன்
சொல்லாமு னன்பினொடு தமயன்மொழி தலைநின்ற
துணைவனே மிகசு பரதன்
தூர்த்தநோ யுறுபுருட னென்னினுந் தெயவமாத்
துதிசெயமனை நாளா யினி
யில்லார் மனசகருத தைககுறிப பாலறிந்
தீகுவோன †சிநதா மணி
யெவ்வுயிரை யுந்தனுயிா போலவே யறிவினு
லெண்ணுவோ னளபா யனுங்
கல்லார மலாபழன வேலிபுடை சூழ்ந்ததென்
காசிமா நகர் வாசியே
கங்கா குலனசுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (௬௩)

## இவ்வகை யோரிலிவர் சிறந்தோ ரெனல்.

தரணிதனின் மானிடரி னூற்றிலொரு வன்கொடிய
சமரரண சுத்த வீரன்
தடைபடா தோரா யிரதசொருவன் மதுரப்பிர
சங்ககவி ராச சிங்கந
திரமுடன் பதினு யிரத்திலொரு வன்சபை
திகழ்ந்தவச னப்பிர தாபன்
செப்பரிய லட்சத்தி லொருவனன் பொடுதனநு
செயபந்து சனரட் சகன்

---

*பூததயை—ஆன்மாக்களிடத்துண்டாய தயவு.
†சிந்தாமணி—தெய்வமணிகளி னொன்று அது வேண்டியவர் கட்கு வேண்டிய பொருள்களைக் கொடுப்பது.

உரனுடைய கீர்த்திக் குவப்பவன் கோடியி
லொருதசனறி வுள்ள தியாகி
யோங்குபல சோடியி லொருத்தனின் பதரிழவி
லொன்றியுறை பரம ஞானி
கரனையடு வரிசிலைக் கரனயன வணங்குபத
கமலியே பாகை நகர்வாழ
கங்கா குலனசுபர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (சசு)

இவரிடத்திது சேர்ந்தாற் பயன்படா தெனல்.

ஈயா மனத்தவ ரிடத்துநிதி புகுசெல்வ
மெய்த்தோர்க் கீந்த தனமும
இடருறற போனதவி செய்கிலாா நட்புமறி
வில்லா மடச்சென மமும்
ஓயாம லலைகடற் பெய்நமழை யும்பிறர்க
குதவாத கல்வி நலமும்
ஓங்குசபை யுட்சோழை யுறறபுல மையுமிநவு
முண்டோர்க் களித்த வனமும்
மாயா விகாரப பரத்தையர் ரிடத்தினில்
வழங்கு பொருளும் புகலிலோ
மண்ணுலகி னிட்பலன வாய்த்திடுவ தல்லாது
வண்மைவர மாட்டாது காண்
காயாநன மலரனைய கண்ணனெடும வநதமுக்
கண்ணியே பாகை நகர்வாழ்
கங்கா குலனசுப்ர மணியனமன மகலாத
கருணை லயச் செல்வியே. (சரு)

எவ்வகைத்தீயபொருள்களடங்கினும் கொடியோர டங்காரெனல்.

தோட்டியி லடங்குநெடு மதயானை முள்ளிட்ட
துப்பசடி வாளத் திறற்
றுட்டத் துரங்கமு மடங்குமொரு மந்திரச்
சொல்லினி லடங்கு நாகந
தாட்டிகப் புலிகளொரு தடையினி லடங்கும்பிர
சண்டப் பசாசு பேயபயங்
தழையினி லடங்கும்பிர வாகத் தெழுந்திடு
சலஞ்சிறைக் குள்ள டங்கும
நாட்டினிற கண்டனைக டண்டனைக டுர்ச்சனரை
நாடொறுஞ் செய்து வரினும்
நறபுத்தி வந்தொழுக் கத்தினி லடங்குவது
நானிலத் தரிதென்பர் காண்
காட்டுமுலை யீருரி புனைந்தவன வலத்தில்வளர்
கவுரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லச்செல்வியே. (சசா)

## திரும்பாத பொருள்களிவையெனல்.

ஏராள மாக்கதித் திருகரை புரண்டலை
யெறிந்தணை கடந்த தண்ணீர்
இன்பதுன பத்துக் கெடுத்தடுதே கத்திடை
யிருந்தினி தகன்ற சீவன்
சீரரு மாதர்மால் கொள்ளைகொண் டே முனஞ்
சென்ற பாலப் பிராயஞ்
சிவபரம சாயுச்சிய பதவியி *லிரண்டறச்
சேர்ந்ததி லயிக்கிய முற்றோர்
தாராள மானசெடி யடவியிடை வேடர்கை
தனிற்பறி கொடுத்த செம்பொன்
சார்ந்தவா பத்தினிற் போனசற புடைமையெரி
தழலினிடை முறுகி வெந்த
காரா ரிரும்புண்ட நீரிவையெ லாம்பின்பு
கழறின மீளாத பொருள்காண்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (சுஎ)

## இக்காரியங்கள் செய்யின் நட்டம் வருமெனல்.

போராடு நெடியரண படிகள முகத்தினிற்
போவதும் பெரியோர் கள்பாற
பொற்புட னிருந்துகற் காதவர்கள் புலமையும்
போதவுங் கைப்பொருள் சடாம
நேராத நோனபுரித் திரையிலே போக்கிய
நெடும்பொழுது நிதியி லாதார
நேயமுறு ¶சீராட்டு மோர்ந்துதான் பாராத
நிகழ்பண்ட முங்க ருதநுட்
டேராத சிற்றிலக் கந்தெரிகி லான்செயுஞ்
செட்டுமுல கத்தி னட்டஞ்
செய்திடு மலால்வளஞ் செய்திடுவ திலையென்று
சேர்ந்தவ ருரைப்பர் சண்டாய்
காரார் கனங்குழற் கமலைகலை மசடொழுங்
கவுரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணாலயச் செல்வியே. (சஅ)

## இலாப மிழப்பவ ரிவரெனல்.

புந்தியின் மகிழ்ந்தொருவ ரீந்ததுகொ டுள்ளமகிழ
புரியாமன் மீட்டு மவரைப்
போதா தெனப்பகர்ந் தேற்றகவி வாணரும்
புவியினிடை யாரவ மனமும்
நொந்துபுண் ணாகமெலி வித்துநிதி கவர்கின்ற
நொய்யபுன் மதிவேந் தரும்
நுவலரிய சரசசம் போகத்தில் வெட்கமுறு
நுண்ணிடைக் கணிகை மாருஞ்

---

*இரண்டற—ஒன்றாக. ¶சீராட்டு—சிறப்பு.

சந்ததமு மாறும லுள்ளத்தில் வெடகமது
தானிலாக் குலம கனிருந
தர்க்கமுட னீதுபோ தாதெனக் கேளாத
சாதுவா மறையோா களுங்
சந்தமலர் நான்முகன் வகுத்தவுல சத்திலே
சனலாப மில்லார்கள் காண்
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணு லயச் செல்வியே. (௨௯)

## இவைகளினிது சிறந்ததெனல்.

துங்கபல வாத்திய மிருக்கினுங் கோவிலிற்
றூயமணி யதிக வாததியா
துதிபூ சுரறகுவெகு நேமம திருக்கினுஞ்
சுருதியுணர் வதிக நேமம்
மங்கையர்க் களவிலா பரணங்கள் பூட்டினு
மங்கிலியா பரண மேலாம்
மன்னவர்கள் செயமதெத் தனைகள்பெற் றுலுமோ
மனுநீதி யதிக செயமாம்
பொங்குமனை தனின்மிக்க பாக்கிய மிருக்கினும்
புததிரர்க ளதிக பாக்கியம்
புனிதமிகு புண்ணியம் பலசெயினு மரியசிவ
புண்யமே யதிக புண்யங்
கங்கைநதி பங்குமதி தங்குசடை நாதனைக்
காதலிக் கினற குயிலே
கங்கா குலன்சுப்ர மணியனமன மகலாத
கருணு லயச் செல்வியே. (௩௦)

## இஃதுளதாயி னிதுநீங் குமெனல்.

தெள்ளுசா லை வல்லவர்க ளாறுலும் வேசியர்
சினேகத் தினிற்பெருமை போங்
தேர்ந்துதொன் னூல்பல படித்தாலு முள்ளச்
செருக்குறிற் கல்வி நிறைபோம்
ஒள்ளியவ ராயிருந் தாலுமோ லோபமது
வுற்றிடிற் குணமெலாம் போம்
ஒருவர விலாமலே பலகடன் படுபவர்க்
குலகத்தின மானமது போம்
உள்ளமதி லொவ்வாத சமுசார வாழ்க்கைவர்
றுற்றவர் தமக்காண்மை போம்
உன்பாத கமலமல ரன்பாய் நினைப்பவர்க்
குற்றபவ வினையெலாம் போங்
கள்ளவிழு மலர்வாவி சூழ்நததென் புக்கொளிக்
கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணு லயச் செல்வியே. (௩௧)

## பனைகவராவா ரிவரெனல்.

ஆதார மில்லாமல் வெகுசடன் படுகின்ற
வப்பனும் பலபுரு டாமேல்
ஆசைகொண் டேதிரியு மாதாவு முதவியொத்
தாசையில் லாத்து ணைவரும்
†ஊதாரி செய்கின்ற மனையாளு மதியிலா
தூர்க்களவு செய்பிள் ளையும்
உண்டுடுத் துச்சரி பிழைக்கப் பொருமலே
யோமலிடு முறமுரா களும்
வேதா விதிப்படியி தெனறுலு மிவர்கட்கு
வேறுவமை யேது சொல்வாம்
வெற்றிபெறு மாயுதங்கொண்டு ‡கொல்லாமலே
வினைசெயுஞ் சத்துரு சண்டாய்
காதோடு பொருதுவினை யாடிடுங் கெண்டையங்
கண்ணியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுபர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (ருஉ)

## மூடரை யெவ்விதத்தினுந் தெளிவிப்ப தருமையெனல்.

அந்தரத் தேதூ ணிறுத்தலாஞ் சாட்டையில்
லாதுபம் பரமாட் டலாம்
அக்கினி யிலாமற சமைச்சலாங் கும்பத்தி
லானையை யடைத்து விடலாம்
புநதிரொ டிரும்பைநவ நீதமது செய்யலாம
புசையின மழைபெய விக்கலாம்
புனலைத் திரட்டியம் மனையாடலாம் பதுமை
புகலவே தானசெய் யலாம்
பைநதமிழ்க் குதிரையை நடத்தலாம் பாறைமேற்
பதுமமதை யலர்விக கலாம்
பரிவிலா மூடரை வருத்தித் திருத்துவது
பாருலகி லரிதரிது காண்
கந்தர மெனுங்கரிய கொந்தள விளம்பணில
கந்தர சவுந்தர மினே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (ருரு)

---

†ஊதாரி—பொருளழிவு செய்கிறவன்.

‡கொல்லாமல் வினை செயலாவது—உடலுறுப்புகளை யொவ்வொ ன்றாகக் களைதல்.

**எவ்வகையுயர்ச்சியுடையோராயினுங் கல்விப்பொருளில்லாதவர் சிறவாரோனல்.**

மறுவற்ற சாதியினு யர்ந்தென்ன வெவ்வன்ன
 மாயிருந் தாலு மென்ன
மன்மதன் போலவே திர்க்கஞ ருலென்ன
 வளமுடைய ருகி லென்ன
குறைவற்ற செல்வரா னாலு மென்னவெழில்
 கொண்ட கனகா பரணமுங்
கொத்துமுத் தாரமும் பூண்டென்ன சிவிகைமேற்
 குலவிவந் தாலு மென்ன
திறமுற்ற கல்விநுண் ணறிவொன் றிலாவிடிற்
 றிரளான காட்ட கத்திற்
செக்கச் சிவந்தமலர் பூத்திடு முருக்கெனத்
 தேர்ந்தவர் மதிப்பர் கண்டாய்
கறையொத்த பதமத களிற்றுரி புனைந்தமுக்
 கண்ணனிட நண்ணு முமையே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணை லயச்செல்வியே. (௫௪)

**மூடரிற் சிறந்தோ ரிவரோனல்,**

பாவினிய றெரியாத புல்லர்மே னற்கவிதை
 பாடுவோ னொரு மூடனும்
பட்சமில் லாரிட மடிக்கடி நடந்துவீண்
 பகருவோ னொரு மூடனுந்
தேவியைக் கைவிடுத் துப்பல பரத்தையைச்
 சேருவோ னொரு மூடனுந்
தின்னும் லியாமல் வீண்கொளை கொடுத்துத்
 திகைக்குமவ னொரு மூடனும்
நாவினிடை யெதிரொன்று மப்புறத் தொன்றுமே
 நவிலுவோ னொரு மூடனும்
நாடுமிவ் வகைமூடர் சொல்லியிலை யென்றுபின்
 னவின்மூ டனுக்கு நிகரோ
காவில்வளர் கிளிபூவை மறையாக மங்கள்புகல்
 காசியவி நாசி வாழ்வே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணை லயச் செல்வியே. (௫௫)

**இவ்வகைப் பெரியோரைக் காப்பவர் செல்வர வரோனல்.**

மாணபரர் செய்யகவி வாணர்விதி வழியொழுகும்
 வைதிகர் வயங்கு குரவர்
மன்னுயிர்க் குதவிபுரி மாட்சியோர் மெலிவுற்ற
 வறுமையோர் தந்தை தாயர்
தீனசன பரிபா லனஞ்செய்து தாழ்ந்துளோர்
 தீர்த்தயாத் திரை நடப்போர்
சிவசமய வாகம புராணபா ராயணர்
 சிவார்ச்சனைக் குரிய செல்வர்

ஆனவிவ ரீரறுவர் தமையுப சரித்துநிதி
யன்புட னளிக்கி லொன்றுக்
காயிர மதாய்விர்த்தி யடையுமென் றேசுருதி
யாய்ந்தவ ருரைப்பர் கண்டாய்
கானவரி வண்டுமது வுண்டுமுரல் பூங்குழற்
கவுரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (ருசு)

**இவ்வகைத் தீயோர்க்குப் பொருள் கொடுத்தலாற் பயனில்லை யெனல்.**

எதுரொன்று ரைப்பதுங் காணுத பேர்தோன்
றிசைப்பது முளார்க்கும் வினையுற்
றெய்தியொரு ஆதாக வந்துளோர்க் குங்கல்வி
யில்லாத பேர் தமக்கும்
பதிவுறு மருத்துவர் தமக்குமய லாரிடைப்
படுபொருள் விரும்பி னோர்க்கும்
பாவையர் நண் மோசா விசாரத தழுந்திப்
படிந்திடும் விடர்களு மனதிற
சதிசொலே நினைக்கினற தீயோர்களு மல்லர்க
டமக்குமுளா மமதை யோர்க்குந்
தருபொரு ளனிக்கில பவாதம்வரு மல்லாது
தகைமைவர மாட்டாது காண்
கதிரொன்று மணிமாட கூடஞ் சிறந்ததென்
காசிமா நகர் வாசியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (ருஎ)

**இந்குண முடையமனைவியியமனை யொப்பாவா ளெனல்.**

எண்ணமே லேகொண்ட கணவனுடன் மதியா
தெடுத்துரை கொடுத்து மிகுசெய்
என்றுன் மறுததுமற் றென்றுதன் மனதுக்
கிசைந்தபடி செய்து கொண்டுந்
தண்ணரு மொழியினுட னுமட மச்சந்
தகைகநு சனதுரிய வாழ்விற்
றுன்வேறு சிறுசேட்டுகந்திறைவ னறியாது
தன்பொரு ளனச்சேர்ந் தியும்
உண்ணமு னுண்டுமய லில்லிடைத் தன்மனை
யொழுக்கமீ தென்று ரைத்தும்
ஒருவர்பேச் சொருவர்க் குணர்த்தியுந் தாய்மனைக்
கோயா மலேநடந் தாங்
கண்ணுன தலைவனுக் கிவைசெய்யு மனையவள்
கடுங்கூற்ற னென்ப ரம்மா
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணாலயச் செல்வியே. (ருஅ)

### கற்புடைய மனைவியின் குணங்களை யுடையாளெனல்.

தேசுபெறு மழகின்மிகு குணவிசே டத்தினிற்
செந்திரு மடந்தை போல்வாள்
செய்யதன் காந்தனுக் கின்பமுறு சம்போக
சேர்க்கையி லரம்பை போல்வாள்
நேசமிகு முகமலர்ந் துபசரித் தன்னமிடு
நிறைபரிவி லன்னை போல்வாள்
நீதியா யட்டிற் றொழிற்கிறைவன் மகிழ்கூர
நேயமுறு மடிமை போல்வாள்
மாசகலு மதியினிற் சதுருபா யந்தெரிசன்
மார்க்கமதில் யூகி போல்வாள்
மானமுத லானகுண நான்குநிறை பொறுமையும்
வளர்ப்பதாற் பூமி போல்வாள்
காசினியி னாயகன் றெய்வமென் றேதொழுங்
கற்புடைய ளிவளென்பர் காண்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (ருக)

### இவ்வகைக் குணங்களை யுடையோன் புண்ணிய வாளனெனல்.

ஆசுமது ரஞ்சித்ர வித்தார முத்தமிழி
னருமையை யறிந்த ரசிகன்
அனைவர்க்கு முபகாரி யறிவுநிறை மாணிக்க
மளவற்ற பூசா பலன்
வாசமுறும் வசனப்பிர மாணிக்கன் வெகுபுத்தி
மான்மகா யோக சாலி
மாதா பிதாவாக்ய பரிபால கன்பந்து
வர்க்கநய சிந்தா மணி
தேசுபெறு மதிரூப மன்மதன் போலவெகு
தீர்ககுண யோக்கிய வந்தன்
தேவதா விசுவாச முள்ளவன் வளந்தேறு
செல்வவான் றியாகி யென்றே
காசினி யுளோர்புகழ் றிடவவ தரித்திடுங்
கனபுருட னேபுண்ய வான்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (சுO)

### இதனினிது மேன்மை யுடையதெனல்.

அம்புவியின் மானிடர் தமக்குறுஞ் செல்வத்
தருட்செல்வ மேசெல்வ மாம்
அரியபல சீவனந் தன்னிலுத் தமமான
ததுவே வித்யா சீவனம்
இன்பமிகு வாழ்க்கைதனி லறுதினமு மனமொத்
திருந்தவில் வாழ்க்கை வாழ்க்கை
யிசைதிடந் தன்னிலே யேதுதிட மென்னிலோ
வியன்மனத் திடமே திடம்

தென்புபெறு கீர்த்தியே தேட்டங்க ளுக்கெலாந்
திறமான † தேட்ட மாகுஞ்
சீர்கொண்ட தியானமதின் மேலான தியானஞ்
சிவத்யான மாகு மென்பார்
கம்பமத யானைமுக னைக்குமர னைத்தருங்
கவுரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௩௧)

## இதற்கிஃதழகேனல்.

நாட்டினுக் கழகுமா நீதியுள மன்னவர்க
ணவரினுக் கழகு மதியா
நற்றவர் தமக்கழகு மூவாசை தனைவிடுத
னல்லவர்க் கழகுகொடை யாம்
வீட்டினுக் கழகுநிதி வானினுக் கழகுகதிர்
விடுகின்ற சந்திர சூரியர்
வேதியர் தமக்கழகு வேதபா ராயண
மிகுஞ்சபை தனக்கழ குதான்
*கோட்டியில் லாதகவி ராசர்செயு நற்றமிழ்க்
கோலா கலப்ர சங்கங்
குவலயந் தனின்மனிதர் தேகத்தி னுக்கழகு
சோதிலாத் திருவெண் ணீறுங்
காட்டின்மட மானைத் தரித்தவன் வலத்தில்வளர்
கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௩௨)

## உண்மையாசிரிய ரிவரேனல்.

ஆசார நேமபர ராய்ச்சகல கலைமுழுது
மாராய்ந்து சித்த சுத்தி
யாகியட் டாங்கயோ காதிநிலை கண்டபர
மான்மானு பவநிலைய ராய்த்
தேசாரு மாத்மபரி பாகம துணர்ந்துநாற்
றீட்சாக்கிர மங்க டெரியுந்
தீட்சண கடாட்சராய் விடயாதி நிக்ரகஞ்
செய்தசரு வஞ்ஞ பரராய்ப்

---

†தேட்டமென்பது—தொழிலாகு பெயராய்த் தேடப்படுபொருளை யுணர்த்தி நின்றது.

*கோட்டி—பரிகாசம்.

பர்சா விகாரந்த சாரபட லங்கிழி
 படப்பொருந் திவ்ய ஞான
பாற்கரா னுக்கிரக விலாசராய்ச் சர்வர்த்ம
 பட்சராய் நவமணி முதற்
காசார் கடற்புவிப் பற்றற் றிருப்பவர்கள்
 காரணக் குரவ ராகுங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணு லயச் செல்வியே. (கஉ)

## உண்மைச் சீடரிவராவரெனல்.

வஞ்சக மிலாதநெஞ் சத்தனு யனுவளவும்
 வழுவிலா தவனுகி மெய்
மணம்வாக் கொருப்படு மொழுக்கத்தி னின்றுபின்
 வழிபடு மவாவி னனுமாய்த்
தஞ்சமென் றேநிழ லெனப்பிரிகி லாதுபணி
 தலைகொண்டு கட்டளை யிடுந
தனிவாக்ய பரிபா லனஞ்செய்து சாந்தருண
 சன்மார்க்க சாத்துவி தனுய்
வெஞ்சின மகற்றிப்பிர பஞ்சவியா பாரமது
 மித்தையென நித்திய ஞான
வேட்கையுற் றுவியுடல் பொருண்மூன்று மாசற
 விளங்கு குரவன் றிருக்கைக்
கஞ்சமலர் மேற்றுரை பெய்துசிவ கதியதைக்
 கருதுவோர் நற்சீ டராங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணு லயச் செல்வியே. (கச)

## இவ்வகைப் பொருள்களெவ்விடங்களினுஞ் சிறந்தமெனல்

இனியவெண் சங்கந் திரைக்கட லிடைச்சிப்பி
 யிடைவந் துதித்த முத்தம்
ஏற்றகதிர் மணியினஞ் சாலக் கிராமமோ
 டெழில்பெறு செழுங்கவரி வால்
பனியதண் சந்தனக் காட்டமத கும்பப்
 பணைக்கை வாரண மருப்பு
பைந்தமிழ்க் கவிவாணர் சிவிகைவேய் பகுவாய்ப்
 பருந்தலை வரிப்புலி நகம்
தணியுறுந் தானம்விட் டப்புறஞ் சார்ந்திடிற்
 கருவசன பூசிதை யிறுற்
சகலமேன் மையுமதிக புகழுமுண் டாமென்று
 சான்றவ ருரைப்பர் கண்டாய்
கனியுமுது யனுவற் கிரங்கியருள் சொரிகடைக்
 கண்ணியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணு லயச் செல்வியே. (கரு)

### இவ்வகைப் பொருள்களை நீக்காமற் கொள்ளவேண்டுமெனல்.

விந்தைபெறு சிவிகையைப் பரிமள சுகந்தமதை
    மேலான திருவெண் ணீற்றை
விரகத்தின் வலியவரு முறைமையுள மடவாரை
    மிக்கபொற் பணியா டையைச்
சுந்தர மிகுநதத்தாம் பூவமதை யினிதான
    சுவைநறுங் கனிவ கைகளைச்
சொல்லரிய மேலோர்க ணகின்ற வனமதைத்
    துய்யபுகழ் சேரு நனிமைச்
செந்தமிழி னுடனிந்த வகையெலாம் பரிவுடன்
    செயமாக வந்த போதே
சிந்தையிற் பிறிதொன்று மெண்ணாது நலமெனத்
    திறமுடன் கைக்கொண் டிடிற்
கந்தமிகு செந்தா மரைக்கண்வளர் திருமகள்
    கடாட்ச மேன்மேலு முண்டாங்
சங்கா குலன்சுப்ர மணியனமன மகலாத
    கருணா லயச் செல்வியே. (௬௬)

### இவ்வகையினோர்க்கித்தீச்செயலாலிந்நலநீங்குமெனல்.

தங்குநறு மலரோதி மடவார் தமக்குவிப
    சாரத்தி னைலம் போகும்
சதுமறையை யாராய்ந்த நூலோர்க்கு வேசியர்க
    டம்மாசை யானலம் போங்
கொள்கைமய நீர்த்தமா தவர்கட்கு மூண்டெழுங்
    கோபத்தி னலம் போங்
குளிருற்ற கங்கை நீ ரென்னினு மூவருடன்
    கூடினு முளநலம் போம்
பொங்குசத்திர் முடிமன்ன வர்க்குக் கொடுங்கோன்மை
    புரியினீ தியின லம்போம்
பொல்லாத துன்மதிப் பிள்ளையா லியாவரும்
    புகழ்கின்ற குலநலம் போங்
சங்குலும் பகலுந் துதிக்குமடி யவர்மனக்
    கவலையை யகற்று முமையே
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
    கருணா லயச் செல்வியே. (௬௭)

### ஒன்றில்லா மலொன்று செய்தலாற் பயனில்லை யெனல்.

துங்கவுள மதுசுத்தி செய்யாம லுடறனைச்
    சுத்திசெய் தாவ தென்ன
துதிபெற்ற தனதுகுல மரபின்வழி நடவாது
    சொல்கின்ற பெருமை யென்ன
அங்கமுண ரதிதியர்க் கன்னமிட் டுண்ணும
    லறுசுவையோ டுண்டு மென்ன
அரியபுகழ் வாசனையை யணியாது கலவைசந்
    தனமணிந் தாவ தென்ன

தங்குசபை யிற்செயா வெகுமதிகள் பின்மிகத்
தான்செய்யி லாவ தென்ன
தாய்பசிக் கில்லாது சேசண்டி கொட்டியனை
தானங்கள் செய்து மென்ன
கங்கையர வொடுதும்பை திங்களாறு கணிகின்ற
கண்ணுதற் கினிய மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௬அ)

இப்பயனடையாதவரிவராகாரெனல்.

வாணிபஞ் செய்துமுத லிடைலாப நுகராத
வணிகனொரு வணிக னல்லன்
வளநிதி புதைத்துவைத் தேற்றுண்டு நாட்போக்கு
மறையவன் மறையோ னலன்
மானுற்ற பெண்டி ரிருப்பவயன் மனைநச்சு
மனிதனொரு மனித னல்லன்
மகிதலத் திற்கலிப் பிணிதவிர்த் தரசுறு
மன்னனொரு மன்ன னல்லன்
பேணரிய பருவத் தினிற்பயி ரிடாக்குடிப்
பெற்றியோன் பெற்றிய னலன்
பிறர்கடுஞ் சொற்செவிக் கின்பமாக் கொள்ளாத
பெரியரோர் பெரிய னல்லன்
காணரிய புக்கொளித் தாணுவொரு பாகங்
கலந்தினி திருந்த மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (௬௯)

இவ்வகையோரிதற்கஞ்சாரெனல்.

சகலகலை கற்றகவி வல்லவன் றிரளான
சற்சனர் சபைக் கஞ்சிடான்
தருசுமை பொறுத்தபெல வாகனம துள்ளவன்
சார்வழி நடைக்கஞ் சிடான்
வகைவகை யனேகபாக் கியமிகப் பெற்றவன்
வருவிருந் துக்கஞ் சிடான்
மாறாத கொடியதா ரித்திரன் செல்வர்பால்
வந்துகேட் கவுமஞ் சிடான்
அகமருவு கொலையினால் வயிறது வளர்ப்பவன்
அரும்பழி யினுக்கஞ் சிடான்
அணுவளவு மானமறி யாதையில் லாதவன்
அவமாற்றி னுக்கஞ் சிடான்
கனமுகடு முகிசிகர கோபுர நிலாவுதென்
காசியவி நாசி வாழ்வே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (எ0)

அவிநாசிக் கருணாம்பிகை சரம்.

### துர்ச்சனர்களுக்குச் செல்வம் வந்தால் மிகவுந்தீச்செயல் செய்வாரெனல்.

பொல்லாத துர்ச்சனர்க டங்களுக் குலகிற்
பொருட்செல்வ மெய்தி விடிலோ
பொறுமையுள பெரியோர்சொ லின்றென்று கேட்டிடார்
போத வாங்கார முறுவார்
அல்லாது கல்வியின் விகற்பமது வாய்த்திடி
லவைக்குணல்லோர் பாடலுக்
காணுது மோர்பழுது தேடியவ மானமுற
வாக்குவோ மென நோக்குவார்
இல்லாமன் மெல்லறிவு கூர்மையுறி லோசனை
யிடத்தில்வெவ் வினைய மதையே
யிசையா திசைத்துவிவ காரஞ்செய்வார் துட்ட
ரென்பவ ரியற்கை யீதாங்
கல்லாலி னிழலினினி துறைபரம சிவனையே
காதலிக் கின்ற மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (எக)

### மாந்தர்களுக்கு மேன்மையானவை யிவையெனல்.

ஊரறிவி னுண்மிக் குயர்ந்தமூ துணர்வினோர்
கேண்மையே கேண்மை கயிலைக்
கிரிநாய கன்றிருக் கூட்டமே கூட்டங்
கிடைக்கொணு வமுதென வுளத்
தளர்வெலா நீக்குமதி மதுரக்கவி வாணர்சற்
சங்கமே சங்க மென்றுந்
தன்பா லிரந்தவர்க் கில்லையென் றுரையாத
தயவே தயா வுடம்பின்
னிழலெனத் தனைவந் தடைந்தவர்க் கைவிடா
நிலைமையே நிலைமை மேன்மை
நெஞ்சவர்க் கொருவழிசொ னீர்மையே நீர்மையா
நிகரிலாப் *பொற்சி லம்பைக்
களவுகொள வுன்னினோன் கதிபெற வரந்தந்த
கவுரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே (எஉ)

---

*பொற் சிலம்பைக் களவு செய்ய நினைந்தவன் கதி பெற்ற கதை அவிநாசிப் புராணம் சங்ககன்னச் சருக்கத்தாலுணர்க.

### இவைகளினிது மேன்மையுடைய தெனல்.

மண்டலந் தனனின்மும் மூர்த்திகளின் முதன்மை மதி
மருவுசடை மகுட ருத்திரன்
வளமுற்ற பிரபைதிகழ் முச்சுடரி லேமுதன்மை
மகிமைபெறு சூரிய சுடர்
பண்டுசொலு முத்தமிழின் முதன்மையது ராகமும்
பண்ணும்வழு வாத விசையாம்
பன்னுமுக் குணமதனி லேமுதன்மை பேறுமிகு
பரிவுள்ள சாத்து வீகம்
அண்டர்புகழ் மூன்றுலக மதனிலே முதன்மை மிகு
மருமையுள பூலோக மாம்
அரிதான முப்பாலின் முதன்மை யெஃதென்னிலோ
வமுதநிக ராமறப் பால்
சண்டலவு நாடியொரு மூன்றுதனி லேமுதன்மை
கனவாத நாடி யென்பார
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (எரு)

### இதற்கிஃதுறுதி யல்ல விதுவெனல்.

மெய்க்குறுதியுத்தரிக கவசமல வுலகத்தின்
மிக்கபர வுபகார மா
மேலான விருசெவிக் குறுதிபொற் பணியல்ல
மென்றமிழி னுண்கேள்வி யாந்
துய்க்குமிர சங்கவரு நாவினுக் குறுதியறு
சுவையல்ல வினது கீர்த்தி
சுபசரித் திரவமுத வாக்யப்பிர தாபங்கள்
சொல்லித துதிப்ப தாகும்
மிக்கவிரு கட்குறுதி பிரபஞ்ச மாயா
விநோதமல வருமறைக்கு
மேலாய் விளங்குநின் பரிபுர பதாம்புய
விசேடமுறு சன்னி தானங்
கைக்கூறுதி கடகமல வில்லையென் றுமற்
கருத்துவர் நீத லாகுங்
சங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (எசு)

### தீயசெயலிவையெனல்

சம்பள மிலாமலே சோறிட் டிலகுவெனத்
தனதுமே சவகம்வைப் பதுஞ்
சாட்சிமுறி யில்லாது வெங்கடனை யீவதுந்
தந்தைதாய் சம்ம தித்தே
யன்புடன் கொள்ளாத பரமாதை மனைவியா
வகமதிற் குடிவைப் பதும்
அறியாத தேசத்து மனிதரைத் துணைகூடி
யதிதூர வழிசெல் வதும்

கம்பிநற் குதிரையென நொய்யபுற் கயிறுகொடு
நாடுகடி வாள மிட்டே
நந்தியதன் மேலேறு கதையாகு முன்சொன்ன
நலமிலாக் காரிய மெலாங்
கம்பமத கும்பசெய தும்பிமுக னைத்தருங்
கௌரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (எரு)

எவ்வகைக் கொடியவிலங்குகளை நம்பினும் வஞ்சகரை நம்பப் படாதெனல்.

சிந்துமத யானையைக் கொடிதான வேங்கையைச்
சிங்கத்தை விறலா ளியைச்
சினமுற்ற பனறியைக் கருமயிர்க் கற்றைச்
சிகைச் சலமுசுக் கரடியைச்
சநததம் பல்விடங் கொண்டசர்ப் பங்களைத்
தரணியிற் பலவு பாய
தந்திர விதத்தினாற் கைவசஞ் செய்தவை
தண்மை செய் தேகம பலாம்
புந்தியிற் கவடுமுறை நாவினிடை யளவிலாப்
பொய்யும் புரட்டு மான
பொல்லாத வஞ்சகக் கயவரைக் கனவிலும்
புனிதரென நம்பொ ணாது
கந்தமிகு வடகாசி தனிலதிக மான தென்
காசியவி நாசி மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (எசு)

இதனிடத்திந்தச்செயல் செய்கவேண்டுமெனல்.

மட்டிலாப் பாரம தெடுக்குமத யானைக்கு
மத்தகங் கொதத வேண்டும்
வாயுவே கக்குதிரை யெனினுஞ் சவுக்கினான்
மதியாது வீச வேண்டும்
இட்டமுட னுதையாத பசுவென் னினுங்கா
லிணைத்துக் கறக்க வேண்டும்
இச்சியாச் சுகியரென் றாலுமோ பொருளினுக்
கெண்ணிய கணக்கு வேண்டும்
திட்டமுட னன்னலரை வெல்சேனை யென்னினுஞ்
சீறியே நோக்க வேண்டுஞ்
செய்யசொற் படிநடக் கின்றமனை யெனினுந்
திடுக்கிடப் பேச வேண்டுங்
கட்டுசடை யவிநாசி லிங்கர்பங் ககலாத
கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே.

### மேலோராவாரிவரெனல்.

மனதுமகிழ் வாகவே பெற்றதா யன்புடன்
    வளர்த்ததா யினிய தந்தை
மீருவுற றுணையெனக் கூடப் பிறந்தவர்கள்
    வரிசையுள மனைவி மைந்தர்
புனலினுறை கொட்டியுட னும்பலும் போலவற்
    புதமான கிளையி னுள்ளோர்
புகலடிமை யானவர்கள் குற்றங்கள் செய்திடிற்
    புந்தியிற் றேர்ந்து தெளிவாய்த்
தனதுகை கண்ணிலே குத்திடு லக்கையைத்
    தானென்ன செய்வ ரதுபோற்
றன்னுடல் சகித்திடு விவேகியர்க ளளவிலாத்
    தண்மைபெறு மேனமை பெறுவார்
கனவினைய மாகியெதி ராடினுல்*வாழைமுட்
    ‡கதையலாற் பெருமை யுண்டோ
கங்கா குலன்சுப்ர மணியனமன மகலாத
    கருணை லயச் செல்வியே. (எஅ)

### எவர்களு நீக்காமல் கொள்ளும் பொருள்களிவையெனல்.

மதயானையின் கொம்பு புலியினக முதுகவரி
    மாவின்மயிர் சிப்பி முத்து
வளர்பூனை வகையினிற கதத்தூரி யினியசவ்
    வாதுடன் புழுகு சட்டம்
விதமான நாகமணி மானுரி மயிற்பீலி
    வெண்சங்க மாவி னற்பால்
விரவுசோ ரோசனை மயிர்ப்பந்து பட்டென
    விளங்குமிப் பொருள்க ளெல்லாம்
இதமான் தானம்விட் டப்புறப் படுவதா
    லிவை யூனின் வந்த வெனவே
யெண்ணியிக ழாமலே புனிதமென் றிவையெலா
    மெவர்களுங் கைக்கொள்வர் காண்
கதைமேவு கையன்முரு கயைனத் தந்திடுங்
    கவுரியே பாவக நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
    கருணை லயச் செல்வியே. (எகூ)

### இல்லறத்தோரிவர்களைக்காக்கவேண்டுமெனல்.

ஆசானை யீன்றதன் னன்னையைத் தாதையை
    யகத்துள்வளர் மனையாட் டியை
யரியகுண மைந்தரைப் பணிபுரியு மேவலா
    ளடிமைபூண் டவரை யுரிய

---

* வாழை முட்கதையாவது—வாழை மரம் முண்மரத்தால் வருந் துங்காரணம்.

‡ கதை—காரணம்.

நேசமுறு மூத்தரர் தமைப்பெரு விருந்தினரை
நிலைமையுட னதிதி யோரை
நீதியுள மறையவரை நாவலர் தமைப்பசுவை
நித்தலும் பரிவு கூர்ந்து
பேசுமிப் பனிரண்டு தன்மையோர் தங்களைப்
பெட்புற விடாது காக்கும்
பெற்றியது மேலான வில்வாழ்க்கை பூண்டுளோர்
பெருமையென மொழிவர் கண்டாய்
காசினியி லுயருமவி நாசிபுரி யீசர்மகிழ்
கவுரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (அ0)

## வெளிப்படுத்தக்கூடாதவையிவையெனல்.

மந்திரப் பொருளை மடமகளிர் புணர்ச்சியை
மனைக்கணுறு திரவி யத்தை
மனையாட்டி தன்குணச் செய்கையைச் சனனத்தில்
வநதினி துதித்த நாளை
மூர்த்துதன் மனையினிடை யெய்துகுற் றங்கடனை
முறைமையாய்த் தன்ன யுளை
முற்றுமு ளம்வைத்த வஞ்சனையை நெறியிலார்
முன்புவரு மவம திப்பை
தந்தனு வுயிர்க்கிறுதி வரினுமிவ் வொன்பதுந்
தகைமையுடை யோர்கள் பிறர்பாற்
சாற்றிடா துறைதலே மேலான குணமெனச்
சான்றவ ருரைப்பர் கண்டாய்
கந்தடரு மயிரா †வதத்தினை யளிகருமுக்
கண்ணியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (அக)

## வெளிப்படுத்தப்படுபவை யிவையெனல்.

தானொரு வருக்கினி தளித்தகட னும்பிறர்
தமக்கினி திசைத்து வாங்குந்
தன்கடனு மக்கட னனைத்தையுந் தீர்ப்பதுந்
தன்மர பொழுக்க நலமும்
மானனைய மதர்விழிக் கன்னியணா யின்பமுடன்
மனதுவந் தினிதீ வதும்
மனதினிடை யறியாமை யாற்செய்த பாவமு
மாட்சிமை யுளோர்கள் குணமு
மேன்மைபெற வேகற்ற கல்வியும் விதரணிகர்
மேம்பாடு மிவ்வொன் பதும்

† அயிராவதத்தினை யளித்தல்—அவிநாசிப் புராணம் அயிராவதச் சருக்கத்தா லுணர்க.

மிக்கபிறர் பாலினி துரைப்பதே நன்மையென
மேலவ ருரைப்பார்கள் காண்
கானவரி வண்டுமது வுண்டுமுரல் வாவிசூழ்
காசியவிநாசி மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (அஉ)

## புலவரிடத்துக்கவி கேட்குமுறைமையிப்படியெனல்.

புனையுமுடி வேந்தர்கவி ராசர்பாற் றமிழ்கொளும்
போது தோரணம் விதானம்
பொருவில் பூரணகும்ப நறுமலர்த் தொங்கல்வெண்
பூம்பாளை கதலி கன்னல்
வனைமணித் தீபமுளை பாலிகை நிறைத்தகா
வணமதின் விளங்கு மட்ட
மங்கலத்தொடு திவ்ய வாத்திய முழங்கமட
மாதரார் வாழ்த்த மிககோ
ரினிதுதற் சூழமே லாசனத் தியல்புட
னிருந்தருங் கவிதை கேட்டே
யின்பமுற நிதியாடை யாபரண மூர்திவிகை
யினியபல வளமு மீந்து
கனிவினுடனேழடி நடந்துநின் மெனநிற்றல்
கவிகொள்ளு முறைமை யென்பார்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (அரு)

## புலவர் தன்பிரபந்தங்கொள்ளாதவரைப்பாடுமியல்பு இவ்வகையெனல்.

பாவலவர் பாடற் பிரபந்தத்தி லாசையும்
பரிசுமில் லாது விடிலப்
பாட்டுடைத் தலைவனைச் சூட்டினதை மற்றொருவர்
பண்புபெறு பேரு மூருந்
தாவுறு தசாங்கமுஞ் சூட்டியிரு செவியுந்
தனைத்தின்ப மூறி யிதய
சந்தோட முற்றிடச் சாற்றிடி லவன்கணுறு
சம்பத்து மிக்க வளமு
மேவுமலர் மகளருளு மீச்சுர கடாட்சமு
மிவன்றனக் காகி விடுமென்
றெல்லா முணர்ந்தமு தறிவுளோர் சாத்தி
யியற்கையீ தென்று ரைப்பார்
காவிமலர் பழனஞ் சிறந்தவவி நாசிவளர்
கௌரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (அச)

### இவ்வகைக் கொடையின ரிவரிவ ரெனல்.

தேகியென வந்தவர்க் குபகார மேசொலித்
      தேற்றுவோன் காற்றி யாகி
செய்கின்ற பெயர்களின் ளூர்களங் கேகெனச்
      செப்புவோ னைாத் தியாகி
மோகமென வவரவர்க் கின்சொலாற் காரிய
      முடிப்போன் முக்காற் றியாகி
முகமதைக் கண்டவுட னிலையென மற்றரு
      மொய்ம்பன முழுத்தியாகி
யாகுமோ ருபகார மிப்படிச் செய்கின்ற
      வன்பனைக் கண்டு மெல்ல
வடுத்துக் கெடுக்கின்ற புத்தியை மறந்தவ
      னளவிலாத் தியாகி யாகும்
*காகமொரு யோகியுண வமுதிட்டு நல்லகதி
      காணவருள் செய்யு மயிலே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
      கருணை லயச் செல்வியே, (அ௫)

### தமிழ்ப்பாவி னருமை கூறல்.

உதைகாலி யானபசு வானலு மோரிசைக்
      குருகியமுதத்தை யீயு
மொன்று மறியாதபா லகனுமோ ரிசைகேட்
      டுவந்து கண்ணிணையு றங்கு
மதமேறு பேயெனினு மோரிசைக் கன்பாகி
      வாய்பேசி யாடி யோடு
மருவுவிட வரவங்க ளோரிசைக் கினிதான
      வாய்முத்த முதவி யாடும்
விதமாக விந்தவகை யறிவிலாச் சென்துகளு
      மெல்லிசை விரும்பு மென்றால்
மெய்யிலைந் தறிவுள்ள மானிடவர் தமிழிசை
      விரும்பிலா ரொருவ ருணடோ
கதிர்வீசு மணியையலை யெறியு நள்ளாறுதிகழ்
      கஞ்சா நகர்க் குமரியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
      கருணை லயச் செல்வியே. (அசு)

### இத்தீக்குண முடையாரிஃதாவ ரெனல்.

பலகற்று மிதுபாவ மிதுபுண்ய மென்னவே
      பார்க்கிலான் கற்ற மடையன்
பாலரைப் பெற்றுமய லார்பெற்ற பாலர்மேற்
      பரிவிலான் பெற்ற மலடன்
குலவுற்ற நல்லவன் போலிருந் துட்பகைக்
      குடிலனே நல்ல பாம்பு

---

* காகம் யோகியுணவமுதிட்டு கதிபெற்றது—அவிநாசிப்புராணம் காகச்சருக்கத்தாலறிக.

குறையாம னிதிதேடி யிட்டுண திின்னமுங்
    கூட்டுவோன கூட்டு மாறு
நலமுற்ற காலிருந் தினியதல யாத்திரை
    நடக்கா னடக்கு முடவன்
நற்கேள்வி கேளாது புனகேள்வி கேட்குமவ
    னற்செவி படைத்த செவிடன்
சலநற்று நிலைபெற்ற பரிசுத்த சிவபக்தர்
    கருதிடுஞ் சிவசத திியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
    கருணை லயச் செல்வியே. (எள)

## இதுவின்றி யிதுசிறவா தேனல்.

எத்தனைசெல் வப்பெருக் காஞலு மேற்பவர்க்
    கீயாத வன்செல் வமு
மெண்ணிலா வித்தைகள் படிக்கினுஞ் சீடனுக்
    கியல்சொலா தவன்வித் தையுஞ்
சித்ர மதரூப ஞனுலுமோ முகமயிர்
    திருநதிலா தவனாண் மையுஞ்
செய்யவ ளெனப்பொலிந் தாலுமோ விருதனச்
    செப்பிலா தவள்பெண் மையுஞ்
சுத்துகறி காயினுட னுண்கினு மணத்த நெய்த்
    துளிபெய் திடாவுண் டியுஞ்
சொல்கின்ற தாம்பூல தாரணஞ் செய்யில்வெண்
    சுண்ணமில் லாத தாகுங்
கத்திகை நறுங்குழற் சிற்றிடைப் பவளவாய்க்
    கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
    கருணை லயச் செல்வியே. (அஅ)

## பரத்தையர்களால் வருந்தீமைக்குத் தப்பிப்பிழைத்த லருமையேனல்.

சதியாகி மன்னர்முட் டுக்கோ லெடுக்கினுந்
    தலையெடுத் துத்தே றலாஞ்
சார்ந்திடு பெரும்படை யினிற்கொள்ளை போயினுந்
    தான்சகித் திடே றலா
மதியாது கள்ளர்திரு டிக்கொண்டு போனுலு
    மனதையொரு வழிதேற் றலாம்
வாயுவெங் கனலான் மிகுந்திடு பெருஞ்சேதம்
    வரினுமொரு வழியுய் யலாங்
கொதியால விழிவலை படுத்தாசை நறவைக்
    கொடுத்துமயல் கொள்ள வைத்துக்
குணமாய்ப் பறிக்கின்ற வேசியர்கள் கொள்ளையாற்
    கொந்திவேர் தன்மதி கெடுங்
கதையாக வேதிரிந் தலைவதல் லாமற்
    கடைத்தேறி னூர்க ளுண்டோ

கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணை லயச் செல்வியே. (அசு)

## சகிக்க முடியாததிது வெனல்.

அதிகபல சேனைலவு கடலலைச் சத்தமு
 மாடிமா ருதசத் தமு
மரியமுகி லிடியார வாரமுஞ் செக்காலை
 யார்ந்தை கூகைச் சத்தமு
மதவெறி மிகுந்தபே ரானைமாச் சத்தமு
 மற்கட்டு நாய்ச்சத் தமு
மடையரது பரியாச நகையில்வரு சத்தமு
 மனமது சகிக்க லாகு
மிதமகித மறியாம லம்பலந் தனினீலி
 யென்னவே நாணம் வெச்சை
யில்லாத வண்டிக ளுதாசனச் சத்தம
 தெவர்க்குஞ் சகித்தி டாது
கதியுதவு மவிநாசி லிங்கர்பங் ககலாத
 கன்னியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணை லயச் செல்வியே. (சுo)

## தானவகை மூன்றுங் கூறல்.

அலைகடலி னிடையிப்பி வாய்பட்ட வுறைகண்மணி
 யானபோற் றக்கவ ரிடத்
தறவாற்றி னீட்டப்படும் பொருளை யுவகையி
 னளிப்ப துத்தம தானமாஞ்
சலகமல தளமீது வீழ்ந்ததுளி தானெனச்
 சார்ந்திடு மிராச தத்திற்
றகுமுவகை யால்வந்த முகமனோர் சையினிடை
 தருதன் மத்திம தானமாம
உலையிடை முழங்குசெந் தீக்கடுந் தழலினிடை
 யுருகிமிக முருகி வெந்த
வொள்ளிரும் பிடைவீழ்ந்த திவலையாந் தீயர்பா
 லுதவியிட லதன்ம தானங்
கலைஞர்முத லனுவற்பிர பந்தமா லிகையலங்
 காரியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
 கருணை லயச் செல்வியே. (சுக)

## முப்பத்திரண்டு தருமமிவை யெனல்.

பண்ணைக வோதுவார்க் குண்டியா துலர்சாலை
 பசுவின் வாயிறை கொடுத்தல்
பகர்மகப் பான்மகப் பேறுமக் கட்சோறு
 பசுவிடுதன் மக வளர்த்தல்
தண்ணுரு மையஞ் சிறைச்சோறு கன்னிகா
 தானந் தலைச்செண்ணை சட்

சமயருக் குண்டிகண் மருந்து தீன்பண்டந்
தணிப்பிணைந் சுடறு விதர்
வண்ணா வயித்தியர் நோய்மருந் தாவுரைகல்
வாவி தண்ணீர்ப் பந்தர்வண்
மடந்தடங் காகிலங் குணவு விலையிந்து கோலை
மாற்றல் செட்டோரை நிறுவல்
கண்ணுடி யுடைசெவிக் கோலைபெ - போகமுயர்
கழறுமெண ணுன்கற மதாங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணு லயச் செல்வியே. (௬௨)

## ஐவகை நிலப்போ நர்களிவை யெனல்.

¶அரக் *இறலிதேன மயிற்பீலி புறுகிவையைந்து
மடவிபடு திரவியங்கள்
அம்பவள முத்துவெண்சங்கு †கொக்கரை யுப்போ
டைந்தாங் கடற்றிரவிய
மருக்குலவு கன்னல் செங்கழுநீர் பசும்பயறு
வாழையொடு செந்நெலைந்தும்
வளமுற்ற நாடுபடு திரவியங் கண்ணுடி
மந்திமத யானை பிதுதன்
செருக்குலவு செம்பொன்முடி மன்னவ னிவ்வைந்துமே
திருநகர்த் திரவி யங்கள்
செய்யதண் குங்குமந் தக்கோல மிளகுடன்
செப்பரிய நறிய கோட்டந்
கருக்கம ழகிற்குலமிவ் வைந்துமுயர் வரைபடுங்
கனதிரவி யங்க ளென்பார்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணு லயச் செல்வியே. (௬௩)

## இத்திசைக்கு இவ்வாரம் பிரயாணம் போகவேண்டு மெனல்.

ஆருமொரு பொருள்குறித் தேகிடக் குணதிசைக்
காங்கார கனறின மதாம்
அன்பிஞெடு தெக்கண திசைக்கேக வுயர்சனியு
மமுதகதி ரோனுரு மாம்
ஏகநெடு மேற்றிசைக் கினியபுத வாரமுட
னிலகு குருவார நாளா
மிருதிதிக் கிழவன் றிசைக்கிரவி வாரமு
மிலங்கு புகர் நாளுமாகும்
வாகினுடனிந் நெறிக்கெய்து வோர்தம்முள
மதித்த பொருளனு கூலமாய்

---

¶ அரக்கு—சிவப்புமெழுகு.

* இறலி—இத்திமரம்.

† கொக்கரை—வலம்புரிச்சங்கு. அன்றி—தூக்கோலை யென்றுபாட
மோதி அம்பர் எனப் பொருள் கொள்வதும் ஒன்று.

மகிழ்வினுடன் வந்தெய்தி வளமை பெறுவாரென்று
　　மறைநூ லுரைப்ப தாகுங்
காகமுது ஞானசிவ லோகமுற வருள்வைத்த
　　கண்ணியே பாகை நகர்வாழ்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
　　கருணா லயச் செல்வியே. (சுச)

பல் துலக்குங் கோம்புகளும் அவற்றினளவும் கூறுகின்றது.

வன்னிநா யுருவிருவலி மாவிலுப் பைநெடு
　　வாகைதண் கொன்றை யீச்சம்
வளர்வுறு மஞிஞ்சிநெடு நெல்லியிவை யல்லாது
　　வருபா லுவர்ப்பு முளதாப்
பன்னுமென் கொம்பு மாச்* விரற்பருமணி
　　லொழுக்கமாப் பன்னிரு விரற்
பசருமறை யோர்க்காகு மற்றையோர்க் கொவ்வொன்று
　　பகாவிரற் கடைநீக் கலா
மின்னுத் திராதித்த நவமிபூ ரணைநத்தை
　　மேவுநாட் பன்னிருக் கான்
மென்புனலின் வாய்சுத்தி செய்துமிழ்தல் விதியென்று
　　மேலவ ருரைத்த நெறிகாண்
சன்னன்மத னைப்பொடி படுத்துநுதல் விழிநீல
　　கண்டன்மயல் கொண்ட கனியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
　　கருணாலயச் செல்வியே. (சுரு)

பிரயாணிகளுக்கு வேண்டும் பொருள்களிவையெனல்.

தூய்யதாம் வெண்ணீ றெழுத்தாணி மிக்கவே
　　சுருளில்வெள் ளேடு செம்பு
துதிதெய்வ காணிக்கை போலவே யொருபணஞ்
　　சொல்லரிய சில காசுடன்
பையுரிய வெள்ளிலை யடைக்காய் சுணாம்புமுன்
　　பழயநீர்ச் சேலை வார்த்தை
பகருதணை யேவலா ளூன்றுகோல் விசையான
　　பாரமாம் பாத ரட்சை
செய்யகலை தீர்க்கின்ற சமையசஞ் சீவியாஞ்
　　செயசுக்கு சக்கு மிக்கி
தேசத்தி லெங்கேர முஞ்சஞ் சரிக்கின்ற
　　திறன்மனித ருக்கிவை யெலாங்
கையைவிட் டகலாமல் வைத்திருப்பது நல்ல
　　காரிய மெனச் சொல்லுவார்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
　　கருணா லயச் செல்வியே. (சுசு)

---

* மதனம்—கடைதல்.

**அன்பு மிகவு முடையவர்களிடத்துஞ் சிலகாலங்களி லன்பு குறை யுமெனக் கூறுகின்றது.**

மகளினைக் கொளுமரு மகன்றனைக் காணிலருண்
மகண்மீதி லாசை மிதமா
மகனுக்கு வந்தமரு மகடனைக் கண்டவுடன்
மகன்மீதி லாசை மிதமாம்
பகர்குதிரை காணினுறு பான்மிகத் தந்திடும்
பசுமீதி லாசை மிதமாம்
பல்லக்கின் மீதுவரு மதிகார மதுவரிற்
பந்துசன ராசை மிதமாந்
தகவுற்ற திரவியங் கண்டிடக் கண்டிடத்
தன்மத்தி லாசை மிதமாந்
தரணிதனி லிப்படிக் கில்வாழ்க்கை செய்மனிதர்
சகசமே யீது கண்டாய்
ககனகூ டந்தடவு மாடநிரை சூழ்ந்ததென்
காசிமா நகர் வாசியே
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (கூஎ)

**திருமாலவதாரம் பத்தையும் கூறுகின்றது.**

மறைகொண்டு போனவா ளவுணனைச் சோதிகக
மச்சாவ தார மமுத
வாரி *மத னத்தினிற் சாய்ந்தகிரி நேர்நிற்கு
மாறுகூர் மாவ தாரம்
பிறைகொண்ட மகுடனடி தேடிட வெடுத்ததே
பெலவரா கவதா ரமாம்
பெரிதிரணி யற்குநர சிங்காவதாரம்
பிறங்குபலி யால் வாமனந்
திறைகொண்ட கார்த்தவீ ராதிரவி குலவேந்தர்
செருமுருக் கித்தவ முறுந்
திண்பரசு ராமாவ தாரம் ராட்சதரைச்
செயிக்க ராமா வதார
முறைகொண்ட பாரத முடித்தை வரைக்காத்து
முடிசூட்டி யுல கழிக்க
முற்றுவித் திடுவாசு தேவபல ராமாவ
தாரமுறை யகல் கலியுகக்
கறைகொண்ட கற்கியவ தாரமிப் பத்துமே
கண்ணனவ தார மாகுங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணை லயச் செல்வியே. (கூஅ)

**சிவமுகூர்த்தம் இருபத்தைந்து மிவையெனல்.**

சந்திரசேகரமுமை மகேசமிட பர்ருடந்
தற்சபா பதிமுகூர்த் தஞ்

சாற்றரிய கல்யாண சுந்தரம் விற்கா*
தகனமொடு பிட்சா டனம்
புந்திநிறை ட ... சங்காரமுப்
புரதகன கால காலம்
பொங்குகய சங்காரம் ரணவீர பத்திரம்
புகல்பிரம சிரசே தனம்
வர்தெதிர் கிராதவர்ச் சுனதண்டிநந்திவிக்
னேஸ்வர வரப்பிர சாத
மருவர்த்த நாரீச சங்கரநா ராயணம்
வளர் *சுகா சன †மகோரங்
கந்தசோ மாஸ்கந்த நீலகண்டஞ் சிவன்
கனமூர்த்த மையைந் ததாங்
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே. (கக)

### இப்பிரபந்தஞ் செய்தாரது வேண்டுகோள்.

புவிமாது கேள்வன் புரந்தரன் கலைவாணி
புருடன்மெய் யன்பி னொழுகிப்
பூசித் திறைஞ்சிப் புனைநதிடுந் தெய்வப்
புதுப்பூ நறுந் தொடையலுந்
தவமான முனிவர்வடி தமிழ்மாலை யுந்தனி
தரித்தநின் றிருவடிப் பொற்
றுமரையி லொருதினைத் தனையளவு மன்பிலாத்
தறுகணன் றக்கோர்கள் பாற்
செவிமா சறக்கல்வி தேர்கிலே னுள்ளமது
தெளிகிலேன் சிற்றறி வினேன்
றிகழுநின் னன்பர்பணி செய்கிலே னாகிலுஞ்
சிறியே னிசைத்த புன்சொற்
கவிமாலை யுங்கொண்டு காத்தருளி முழுதுங்
கடைத்தேற்ற வேண்டு மம்மா
கங்கா குலன்சுப்ர மணியன்மன மகலாத
கருணா லயச் செல்வியே.



ஸ்ரீதென்காசியாகிய அவிநாசிக் கருணாம்பிகை சதகம் முற்றிற்று.

---

*சுகாசனம்—தக்ஷிணாமூர்த்தம்.
†அகோரம்—அபஸ்மாரம் என்னும் நோயாகிய தேவதையை தமது திருவடியின் மிதித்துள்ள மூர்த்தம்.